கண்டிக்க ப்ராப்தம். "காக்கை வாயிலும் கட்டுரை கொள்வதன்றோ" ஸ்வரூபம். அது நிற்க, தயாஸப்தார்த்த விஷயமாகவும் ஸ்ரீ. உ. வே. அண்ணங்கராசார்ய ஸ்வாமி அருளிய விஷயம் அவரபிப்ராயமா? பட்டர் போல்வார்களின் அபிப்ராயமல்லவோ? பட்டர் ஸ்ரீ ஸூக்தியின் மீதன்றோ இவர் தூஷணைகள் எழுதப் புகுந்தது. எல்லா ஆசார்யர்களையும் ஸமரூபமாகவே ஸம்பாவிப்பதாக எழுதும் இந்த ஸ்வாமி ஸ்வபாவத்திற்கு இவ்வாறு கண்டிப்பது பொருந்துமோ? பட்டருடைய ஸ்ரீ ஸூக்தியை அபலபிக்க யார் சக்தர். "ஸ்வார்த்த ஹர்ஷயோகாத்யபாவேபி" என்கிற ஸ்ரீஸூக்தி என்போல்வார்களும் நன்கறியும்படி யன்றோ விளங்கா நிற்கின்றது? அதற்குத் தாத்பர்யம் அப்படியில்லை என்றே ஏ. வி. ஜீ. ஸ்வாமி ஸாதிக்கிறபடி கொண்டாலும் ஸப்த ஸந்நிவேஸத்தில் விவாதம் வைத்துக்கொள்ள வேண்டிய அவசியமில்லை யன்றோ? அதுபோலவே மற்றையோர்களும் சொல்லி வருகிறார்களென்று இந்த ஸ்வாமியும் திருவுள்ளம் பற்றி இருந்திருக்கக் கூடாதோ? இதில் அநாவஸ்யகங்களான விசாரங்களை வளர்த்திக்கொண்டு போருவது உசிதமா? என்பதை விவேகிகள் விசாரிக்கவேண்டும்.

ஆக வாத்ஸல்யம், தயை என்கிற இரண்டு விஷயங்களைப்பற்றியும் ஸ்ரீ கோபாலாசார்ய ஸ்வாமியின் உக்திக்கு உத்தரமாக ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமி வெளியிட்டிருக்கிற பத்ரிகைகளில் இரண்டு ஸம்ப்ரதாயங்களினுடையவும் ஸாமரஸ்யம் (ஒற்றுமை) அழகாக நிரூபிக்கப்பட்டிருக்கின்றதே யல்லாமல் ஒரு ஸம்ப்ரதாயத்தை தூஷித்திருப்பதாகக் காணக் கிடைக்குமோ? ஸ்ரீ கோபாலாசார்யர், ஸ்ரீ அண்ணங்கராசாரியரைப் பற்றி எவ்வளவோ மறுத்து எழுதுகிறார். ஸ்ரீ அண்ணங்கராசாரியரும் அவ்வாறே மறுத்து எழுதுகிறார். இது விஷயத்தில் அடியேன் சிறிய ஞானத்தன் என்ன செய்யமுடியும்?

இன்னமும் இந்த் கோபாலாசார்யர் எழுதும் விஷயங்களைப் பற்றி அடியேன் எழுதினால் பக்ஷபாதத்தினால் எழுதுவதாகவே சிலர் கருதக்கூடும். ஆயினும் விவேகிகளின் உள்ளத்திற்கு விஷயவுண்மை விளங்காமற் போகாது. இதுவரையிலும் இவ்விரண்டு ஸ்வாமிகளுக்கும் பரஸ்பரம் அனேக விஷயங்களில் விவாதம் ஏற்பட்டு ஓயாமல் இருவரும் பத்திரிகைகள் மூலம் போராடி வருகிறார்கள். இருவருடைய போராட்டமும் மிகவும் அநாவஸ்யகமென்றே மத்யஸ்தர்கள் கருதுகிறார்கள். அடியேனுடைய எண்ணமும் இதுவே. பாதுகா ஸஹஸ்ராவதார தத்வ விமர்சம் என்று பெயரிட்டு ஒரு நீண்ட

தால் வெளியிட்டு வருகின்றூர். அதிலும் அண்ணங்கராசார்ய ஸ்வாமியைப்பற்றி மறுத்தே எழுதி வருகின்றூர். அண்ணங்கராசார்யரும் ஸ்ரீ தேசிக ஸூக்திஜயத்வஜ மாலையில் ஸ்ரீ கோபாலாசார்யரை மறுத்து எழுதி வருகிறூர். இதற்கென் செய்வோம் யாம். அடியேன் ஸ்ரீ கோபாலாசார்ய ஸ்வாமி ஸந்நிதிக்கு விடுத்த பத்திரிகைகளுக்குப் பதிலாக அவர் அநேக ஆச்சர்யமான அர்த்த விசேஷங்களை வெளியிட்டு வருகிறூர். ஆயினும் அடியேன் எழுதிக்கொண்ட விஷயங்களுக்கு ஏதாவது பதில் உண்டா? என்பதை ப்ரமாணிகர்கள் அறிவித்தால் அவர்கள் விஷயத்தில் தலையல்லால் கைமாறிலேன். அறியாதவர்கள் எழுதினூல் அவர்களுக்குப் பதில் ஏதாவது எழுதலாம். இந்த கோபாலாசார்ய ஸ்வாமி விஷயங்களை அறிந்துவைத்தே இவ்வாறு எழுதுவதற்கு பதில் எழுதுவது உசிதமன்று என்றே அடியேன் வாளாவிருக்கின்றேன்.

---

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ ராமாநுஜ ஸித்தாந்தம்

எம்பெருமான் தொடங்கி எம்பெருமானூர் நடுவாக அஸ்மதாசார்யர்கள் பர்யந்தமாகவுள்ள ஆசார்ய பரம்பரையில் "ஜ்ஞாநாந் மோக்ஷம்" என்கையால் ஸம்ப்ரதாய பரம்பராப்ராப்தமான ரஹஸ்யார்த்த ஜ்ஞானமே, நிரதிசய புருஷார்த்தமான மோக்ஷத்தை அடைவதற்கு உறுப்பாகும். ஆகையால் நமது பூர்வாசார்யர்கள் ஆங்காங்கு நம்போல்வார்கள் உஜ்ஜீவிப்பதற்காக அருளிச்செய்திருக்கும் அர்த்த விசேஷங்களை அடியேன் பெரியோர்கள் ஸந்நிதியில் அடிபணிந்து அறிந்துகொண்டபடி இங்கு விண்ணப்பித்துக்கொள்கிறேன்.

பதார்த்தங்கள் ப்ரமாணம் ப்ரமேயம் என்று இருவகைப்படும். அவற்றுள் ப்ரமேயங்களை உள்ளபடி அறிவதற்கு ஸாதகமாயிருக்குமவை ப்ரமாணங்கள் எனப்படும். அப்ரமாணங்கள் ப்ரத்யக்ஷம், அநுமானம், ஶப்தம் என்று மூன்று வகைப்படும். ப்ரத்யக்ஷமான பதார்த்தங்களை அறிவதற்கு இன்றியமையாத செவி, வாய், கண், மூக்கு, உடல் மனமும் ஆகிய ஆறு புலன்களும் ப்ரத்யக்ஷமெனப்படும். இவ்வாறு ப்ரத்யக்ஷ ப்ரமாணங்களால் அறியப்பட்ட வஸ்துக்களில் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாமலிருக்கும் நிலைமையை அறிந்து அவைகளில் ஒன்றைக்கொண்டு மற்றென்றை அறிவதற்கு யோக்ய

மான யுக்திகள் அநுமானம் என்று சொல்லப்படும். அதாவது மலையின் கண்ணுள்ள புகையைக் கண்டவுடன் அப்புகை நெருப்பில்லாவிடத்து உள்தாகாமையால் அவ்விடம் நெருப்புளது என்று அறிவதற்கு யோக்யமான யுக்தி விசேஷம்.

சப்தமாவது ப்ரத்யக்ஷத்தால் அறிய முடியாத விஷயங்களை உள்ளபடி அறிகைக்கு யோக்யமான அக்ஷராத்மகமாயுள்ள ஶப்தங்கங்கள். அந்த ஶப்தங்களாவன அபௌருஷேயங்களாய் நித்ய நிர்த்தோஷங்களாய் ஸ்வத:ப்ரமாணங்களாயிருக்கும் வேதங்களும், அவைகளின் அர்த்தங்களை அறிவதற்கநுகூலங்களான மீமாம்ஸாதி ஶாஸ்த்ரங்களும், அவ்வேதார்த்தங்களை ப்ரத்யக்ஷமாக ஸாக்ஷாத்கரித்த மனு முதலாயினோர் ஸ்ம்ருதிகளும், அவ்வேதார்த்தங்களை அறுதியிடாநின்ற இதிஹாஸ புராணங்களும், பாஞ்சராத்ராதி ஆகமங்களும், மயர்வறமதிநல மருளப்பெற்ற ஆழ்வார்களுடைய திவ்ய ஸூக்திகளாய் தென்மொழி மறை என்று கொண்டாடப்படும் திவ்யப்ரபந்தங்கள் நாலாயிரமும், அவைகளை அடியொற்றிய பூர்வாசார்யர்களுடைய ஸ்ரீஸூக்திகளும்.

அவைகளில் வேதம், அபௌருஷேயம். (புருஷனால் செய்யப்படாதது.) ஆகையால், மயக்கம், வஞ்சனை, கவனமில்லாமை முதலாகிய குணங்களால் ஏற்படும் தோஷமில்லாததாயிருக்கும். ஸ்வத: ப்ரமாணமாவது, ஒரு விஷயத்தைத் தெரிவிக்கும்பொழுது மற்றொன்றை அபேக்ஷியாது தானே அறிவிக்கும் பெருமை. அது நித்யமாயிருக்கும். அஹங்கார தத்துவத்தினுடைய கார்யமான ஶப்தத்தை எப்படி நித்யம் என்று சொல்லமுடியுமெனில்? சப்தங்கள் அநித்யமாயிருந்தாலும் ஒவ்வொரு கல்பங்களிலும் அந்த ஶப்தங்களுடைய க்ரமங்கள் வேறுபடாமல் ஸர்வேஶ்வரன் திருவுள்ளத்தில் வைத்திருந்து கல்பந்தோறும் வெளியிடுகின்றமையால் நித்யமென்று சொல்லப்படுகிறது. இதிஹாஸாதி புராணங்கள் வேதத்தை அடியொற்றியே ப்ரமாணங்களாகும். வேதவிருத்தமான அர்த்தங்களை அறுதியிடுமவைகள் ப்ரமாணமாகமாட்டா. பாஞ்சராத்ரம் ஸர்வஜ்ஞனான ஸர்வேஶ்வரனால் சேதனர்களுடைய உஜ்ஜீவநார்த்தமாய் அருளிச்செய்யப்பட்டதாகையால் வேதம்போலவே ஸ்வத: ப்ரமாணமாகும். அப்படியே மயர்வறமதிநல மருளப்பெற்ற ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளாகிய திவ்ய ப்ரபந்தங்களும் ப்ரமாணங்களாகும்.

படைத்தான் கவி என்கிறபடியால் இந்த திவ்ய ஸூக்திகளும் வேதம் போலவே ஸர்வஜ்ஞனான ஸர்வேஶ்வரன் ப்ரளயகாலத்தில்

தன் திருவுள்ளத்தில் வைத்திருந்து ஸுப்த ப்ரபுத்தந்யாயத்தாலே இந்த திராவிட பிரபந்தத்தை ஆழ்வாருக்கு அருளிச்செய்ய ஆழ்வாரும் மதுரகவிகள் போன்ற மஹாநுபாவர்களுக்கு அருளிச்செய்ய உலகில் வந்திருக்கின்றமையால் த்ராவிட ப்ரபந்தத்தையும் அபௌருஷேயமான வேதமென்றே சொல்லக்கூடும்.

அபௌருஷேயமாய் நித்யமான வேதம், கர்மபாகம் ப்ரஹ்மபாக மென்று இரண்டு வகைப்பட்டிருக்கும். அவற்றில் கர்மபாகமானது அசித்ப்ராயர்களான சேதனர்கள் உஜ்ஜீவிப்பதற்கு ஸர்வேஸ்வரன் பரம க்ருபையினால் அநுக்ரஹித்த அவயவங்களைக்கொண்டு அவனை ஆராதிப்பதற்கு அநுகூலங்களான யஜ்ஞம் முதலான கர்மங்களையும் அவைகளை அநுஷ்டிக்கும் ப்ரகாரங்களையும் அழகாகச் சொல்லுமதாயிருக்கும். அவைகளை ப்ரயத்யக்ஷீகரித்த மனு முதலியினோர் ஸ்ம்ருதிகள் அந்தக் கர்மபாகமான வேதார்த்தங்களை நாமறியும்படி விஸ்தரியா நிற்கும். ப்ரஹ்மபாகம் "ஸ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:" என்கிற ஸர்வேஸ்வரனுடைய ஸ்வரூப ரூப குணவிபவாதிகளையும் அவனை அடைவதற்கு உபாயத்தையும் அவ்வுபாயத்தால் அடையக்கூடிய பலத்தையும் அப்பலத்தை அடைவதற்கு யோக்யனை புருஷனுடைய ஸ்வரூபத்தையும், அப்பலத்தைப் பெறுவதற்கு இடையூறான விரோதி ஸ்வரூபத்தையும் அறிவிக்குமதாயிருக்கும். இவ்வர்த்த விசேஷங்களையே விஸ்தரியா நிற்கும் ஸ்ரீராமாயணாதி இதிஹாஸங்களும், ஸாத்விக புராணங்களும். மேற்சொல்லப்பட்ட ப்ரமாணங்கள் போலவே பகவத் கடாக்ஷமடியாகப் பெற்ற திவ்யஜ்ஞானத்தையுடைய ஶிஷ்டர்களின் ஆசாரங்களும் ப்ரமாணங்களாக ஆகும். "தர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேதாஶ்ச." (தர்மத்தையறிந்த சிஷ்டர்களுடைய ஆசாரம் ப்ரமாணம் வேதங்களும்) என்று சொல்லா நின்றதிறே. இதில் தர்மத்தையறிந்த ஶிஷ்டர்களின் ஆசாரம் ப்ரமாணம் என்று முந்துற முன்னம் ஶிஷ்டாசாரத்தைச் சொல்லியிருப்பதுடன் வேதமும் என்று சொல்லப்படுகிற சகாரத்தாலும் வேதத்தைக்காட்டிலும் ஶிஷ்டாசாரம் முக்யமான ப்ரமாணம் என்று சொல்லப்படுகிறது.

---

# நமது ஐந்தாவது ஜார்ஜ் சக்ரவர்த்தி

தற்சமயம் நமக்கு அகஸ்மாத்தாய் ஒரு வருத்தமும் அதைக் கொஞ்சம் ஆராய்ச்சி செய்தவுடன் ஸமாதானமும் அடைய நேர்ந்தது. அதாவது நமது ராஜாதிராஜனாகிய ஜார்ஜ் சக்ரவர்த்தி ஸ்வர்க்கம் சென்றார் என்கிற சமாசாரம் செவிக்கெட்டியபொழுது ஒரு வருத்த முண்டாயிற்று. அதைச் சிறிது பராமர்சித்தவுடன் அவர் இவ்வளவு காலம் இவ்வுலகை இனிது ஆண்டு இதேமாதிரி விண்ணுலகையும் ஆளக்கருதி விண்ணுலகம் சென்றிருக்கின்றார் என்றே நினைக்க வேண்டும்.

மேலும், நர: பதிதகாயோபி—யஸ: காயேநஜீவதி—என்கிற படி ப்ராக்ருதமான சரீரத்தைவிட்டு அப்ராக்ருதமான யஸஃஸரீரத்தை அவலம்பித்திருக்கின்றார். ராஜாதிராஜனாகிற நமது சக்ரவர்த்தியின் பெருமையைப் பேசப் புகுந்தால் "நாவிஷ்ணு: ப்ருதிவீபதி:" என்று சொல்லுகிறபடி ஸாக்ஷாத் விஷ்ணுவே நமது சக்ரவர்த்தி என்று சொல்லவேண்டும். இல்லாவிடில் இவ்வளவு பெருமை ஏற்பட இயலாது. நமது சக்ரவர்த்தியின் அரசாட்சியானது நமது தேசத்தை முன் ஆண்டுவந்த அரசர்களின் அரசாட்சியை அடியொற்றினதாகவே காணப்படுகின்றது. முன் அரசாண்டவர்களின் அரசாட்சியைச் சொல்லும்போது ஒரு துறையில் புலியும் பசுவும் தண்ணீர் அருந்துமாறு ஆண்டார்கள் என்று சொல்லப்படுகிறது. அதை நாம் சரித்திரங்களில் படிக்கின்றோமே யல்லாமல் ப்ரத்யக்ஷமாகக் கண்டதில்லை. ஆதலின் அது விஷயத்தில் நமக்கு அவ்வளவு நம்பிக்கை உண்டாகாமலிருந்தது. தற்காலம் பெரியது சிறியதை நலியாதபடி ஆண்ட நமது சக்ரவர்த்தியின் அரசாக்ஷியை ப்ரத்யக்ஷமாகக் கண்டோமாதலால் அது ஸம்பாவிதமென்றே நினைக்க நேருகின்றது. மேலும் அந்நல்லடிக் காலத்தில் அவர்கள் ஆண்டுவந்தது அவ்வளவு பெருமையல்ல. கலிஸாம்ராஜ்யம் பண்ணுமிக்காலத்தில் இவர் அரசாண்ட பெருமையைப் பன்னி யுரைக்குங்கால் பாரதமாம். அவ்வாறு மண்ணுலகை ஆண்டு விண்ணுலகையும் ஆள விரும்பித் தன்னுடைய புதல்வரான ஹெட்வர்ட் சக்ரவர்த்தியை இவ்வுலகாள வைத்துவிட்டுத் தான் வானாளச் சென்றிருக்கிறார். அவர் புதல்வரான ஹெட்வர்ட் சக்ரவர்த்தியும் "திநாந்தே நிஹிதம் தேஜ: ஸவித்ரேவ ஹுதாஸந:" என்கிறபடி சாயங்காலத்தில் சூர்யனால் கொடுக்

கப்பட்ட தேஜஸ்ஸை அடைந்து அக்நியானது எவ்வாறு ஜ்வலிக்கின்றதோ, அவ்வாறே நமது ஜார்ஜ் சக்ரவர்த்தியினால் கொடுக்கப்பட்ட ராஜ்யத்தைப் பெற்ற அவர் புதல்வரான ஹெட்வர்ட் சக்ரவர்த்தி அதி தேஜஸ்வியாய் பெரியது சிறியதை நலியாதபடி "யாவதா வர்த்ததே சக்ரம் யாவதீஹ வஸுந்தரா" என்கிறபடி ஆஜ்ஞாசக்ர முள்ளளவும் பூமியுள்ளளவும் இவ்வுலகை இனிது ஆளும்படி எல்லாம்வல்ல இறைவன் இன்னருள் புரியுமாறு வேண்டுகிறேன்.

இங்ஙனம்

**வடகரை இராமாநுஜாசாரியார்,**

பத்திராதிபர், S. R. S. வைஜயந்தீ.

---

## வர்த்தமானங்கள்.

**காஞ்சீபுரம் தேவப்பெருமாள் உத்ஸவங்கள்:**—நாளது மாசி மாதத்தில் சுக்லபக்ஷ தசமியன்று (2-3-36) திங்கட்கிழமை தென்னேரித் தெப்பத்திருநாள் நடைபெறும். முதல்நாள் இரவு 10-மணிக்குப் பெருமாள் ஸந்நிதியை விட்டுப் புறப்பட்டருளிப் பல கிராமங்களையும் அக்ரஹாரங்களையும் அலங்கரித்துக்கொண்டு மறுநாள் காலை 11-மணிக்குத் தென்னேரி சேர்ந்து அங்கு அற்புதமான திருமஞ்சனங் கொண்டருளி மாலை 5-மணிக்குமேல் தாதஸமுத்ரமென்கிற ஏரியில் தெப்பம் கண்டருளி, அகரம் என்கிற வைதிகாக்ரஹாரத்தில் லோகவிலக்ஷணமான திருவீதிப் புறப்பாடுடன் அவ்வூர் ஸந்நிதியில் எழுந்தருளியிருந்து திருவாராதன நைவேத்யாதிகள் விசேஷமாகக் கண்டருளி மறுநாள் உதயம் காஞ்சீபுரம் ஸந்நிதியில் சேர்ந்தருள்வர்.

8-3-36 ஞாயிற்றுக்கிழமை பௌர்ணமியன்று ராய்ஜீ குளத் தெப்பத்திருநாள் ஆச்சரியமாக நடைபெறும். மறுநாள் முதல் மூன்றுநாட்கள் ஸந்நிதியுள்ளே துரைத்தோட்டத்தில் நவனவுத்ஸவம் பரமபோக்யமாக நடைபெறும்.

**திருக்கச்சிநம்பிகளுத்ஸவம்:**—இவ்வாசிரியருடைய வருஷோத்ஸவம் ஸகல திவ்ய தேசங்களிலும் நடைபெற்றாலும் இவருடைய திருவவதாரஸ்தலமான பூவிருந்தவல்லியில் 10-நாளும் திருவீதிப் புறப்பாடுடன் வெகு சிறப்பாக பக்தவர்க்கங்களால் நடத்திவைக்கப்படும். 21-2-36௳ உத்ஸவாரம்பம். 1-3-36௳ மிருகசீர்ஷத் திருநக்ஷத்திரத்தன்று (ஞாயிற்றுக்கிழமை) சாற்றுமுறை.

## திருநாராயணபுரம்

இது மேலக்கோட்டை என்கிற திவ்யக்ஷேத்ரம். இந்த க்ஷேத்ரமானது க்ரதயுகத்தில் நாராயணாத்ரி என்றும் த்ரேதாயுகத்தில் வேதாத்ரி என்றும் த்வாபரயுகத்தில் யாதவாத்ரி என்றும் கலியுகத்தில் யதிஸார்வ பௌமரான எம்பெருமானாரால் ஜீர்ணோத்தாரணம் பண்ணப்பட்டதால் யதிஸைலமென்றும் சொல்லப்படுகின்றது. மேலும் இந்நகருக்கு உடையவர் திருநாராயணபுரம் என்று திருநாமம் சாத்தின படியால் திருநாராயணபுரமென்றும் எல்லோராலும் போற்றப்படும். பங்குனிமாதத்தில் ப்ரும்ஹோத்ஸவம் வயிரமுடி ஸேவை, 17-2-36 (மாசிமீ 5-ௐ) கேட்டை நக்ஷத்திரத்தில் டில்லியிலிருந்து உடையவர் செல்வப்பிள்ளையை எழுந்தருளுவித்துக் கொண்டு எழுந்தருளின தினமாகையால் அன்று காலை ஸன்னிதியில் செல்வப்பிள்ளைக்குத் திருமஞ்சனம் மிக விமர்சையாய் நடைபெறும். உடனே உடையவருடன் தேசிகன் ஸன்னிதிக்கு எழுந்தருளி தளிகை முதலானதுகள் அமுது செய்து பல்லக்கில் செல்வப்பிள்ளையும் தோளுக்கினியானில் உடையவருமாக வீதி எழுந்தருளுகிற உத்ஸவம் மிகவும் அழகாக நடைபெறும்

## திருவல்லிக்கேணி காலக்ஷேபங்கள்

ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமி திவ்யாலயம், ஸ்ரீவேதவல்லித்தாயார் ஸந்நிதியில் ஸ்ரீமான் திவான் பஹதூர் M. O. பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமி சார்டி மூலமாய் சுமார் இருபது வருஷகாலமாய் உபயவேதாந்த ப்ரவர்த்தகரான திருமழிசை கோ. க. அ. ராமானுஜாசார்யஸ்வாமி அநேக ஸம்ப்ரதாயக்ரந்த காலக்ஷேபங்களை நடத்திக் கொண்டு வந்து, கொஞ்ச காலமாய் அந்தக் காலக்ஷேபங்களிலிருந்து நிவர்த்தராயிருக்கிறபடியால், ஷை தாயார் ஸந்நிதியில், அந்த ஸ்வாமியினுடைய அந்தே வாஸிகளான தி. ஆஸூரி, வெ. ஸ்ரீனிவாஸாச்சாரியர் ஸ்வாமி' தி. ஆஸூரி, ரா. ரங்காச்சாரியர் ஸ்வாமி இவர்கள் முறையே, ஹரிவம்ஸகாலக்ஷேபமும், பகவத்கீதா காலக்ஷேபமும் அந்தந்த வாரங்களில் பகல் 3மணிக்கு நடத்திக்கொண்டு வருகிறார்கள். அநேகர் வந்து கேட்டுக்களிக்கின்றனர்.

திருவல்லிக்கேணி ஸ்ரீ வானமாமலை மடத்தில், காலை 7½மணிக்கு தி. ஆஸூரி, வெ. ஸ்ரீனிவாஸாச்சார்ஸ்வாமி 'தத்வத்ரயம்' பிரதி தினமும் நடத்திக்கொண்டுவருகிறார்.

## மாம்பலம்.

திருக்கண்ணபுரம் ந்யாய வேதாந்த ப்ரவர்த்தகரான ஸ்ரீமான் வரதாசார்யஸ்வாமிகளால், *மாம்பலம் ராமானுஜன் தெரு, ராமானுஜ நிலயத்தில் ப்ரதி ஞாயிற்றுக்கிழமை காலை 8-மணிக்கு திருமந்த்ரார்த்தம் உபந்யஸிக்கப்படும்.*

## கோயில் மாசியுத்ஸவம்.

*ஸ்ரீரங்கம் ரங்கநாதப் பெருமாளுக்கு தைமீ முதற்கொண்டு நான்கு மாதங்களிலும் நான்கு பிரம்மோத்ஸவங்கள் நடைபெறுவது வழக்கம். தையுத்ஸவம் வெகுவிபவமாக நடைபெற்றது. மாசி ப்ரம்மோத்ஸவம் நாளது மாசிமீ 13-ந் தேதி (25-2-36) முதல் நடைபெறும். முடிவில் தெப்பவுத்ஸவம் நடைபெறுவதால் இதற்கு மாசித் தெப்பத் திருநாள் என்கிற பெயரும் வழங்கிவருவதுண்டு.*

## திருவெவ்வுளூர் ஸ்ரீ வீரராகவர்தெப்பம்.

22—2—36உ *அமாவாஸ்யையன்று நடைபெறும்.*

## திருபுட்குழியில் தெப்பம்.

*இந்த திவ்யதேசத்தில் ஸகலமான உத்ஸவங்களும் வெகு அழகாக நடந்துகொண்டிருந்தன. சில வருஷங்களாகப் பலவகை விவாதங்களினால் ஒரு உத்ஸவமும் நடைபெறாமல் நின்றிருந்த குறையை நீக்க, சென்ற தையமாவாஸ்யை முதலாக மூன்று நாள் தெப்பவுத்ஸவம் நடத்துவதாக ஆரம்பம் செய்து ஒருநாள் உத்ஸவம் நடத்தப்பட்டது. அவ்வளவிலேயே கலஹங்கள் ஏற்பட்டு உத்ஸவம் நிறுத்தப்பட்டுவிட்டது. பக்தர்களுக்கு விசாலஹ்ருதயமுண்டாகி நல்லவழி பிறக்கவேணும்.*

## திருக்கண்ணபுரம் மாசிமகம்.

*இத்தலத்து எம்பெருமான் சௌரிராஜப் பெருமாளுக்கு மாசிமஹோத்ஸவமென்கிற ஒரு ப்ரம்மோத்ஸவம்* 28—2—36உ *முதலாக நடைபெறும்.* 7—3—36 *மக நக்ஷத்திரத்தன்று திருமலைராஜன் பட்டணத்திற் கெழுந்தருளிக் கடலில் தீர்த்தம் ஸாதிக்கிற அதிசயங்கள் வெகு அற்புதமானவை. இவ்வுத்ஸவம் ஸ்ரீபெரும்பூதூரிலும் ஐந்து நாள் நடைபெறும்.*

## திருவத்யயநோத்ஸவம்

வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியார்

மாஸங்களிற் சிறந்தது மார்கழி மாதமென்பது, ஸ்ரீ கீதாசார்யாபிமதமன்றோ? தேவதைகளின் திநாரம்பமான தை மாஸத்துக்குப் பூர்வபாவியாய் ப்ரபாதஸமயமாயிருப்பதே, அப்படி அந்த மாஸம் கொண்டாடப் படுவதற்குக் காரணமாயிருக்கும். அந்த மாதத்திற் சுக்லபட்சவேகாதசி தொடங்கிப் பெரிய பெருமாள் வடமொழிவேதத்தைக் கேட்டுப்போருவது வழக்கமாயிருந்ததாம். அதற்கு அத்யயநோத்ஸவமென்று பெயராம். அப்படி நடந்து வரா நிற்கையில் திருவரங்கம் பெரிய கோயிலில் ப்ராகாராதி கைங்கர்யங்களைச் செய்தருளின திருமங்கைமன்னன் காலத்தில் அவ்வாழ்வாருக்குப் பெரிய பெருமாள் அருள்பாடிட்டு ஸம்ஸ்க்ருத வேத ஸாம்யம் தென்மொழிவேதமாகிய திருவாய்மொழிக்கு உண்டென்று தாம் திருவுள்ளம் பற்றியிருப்பதை ஸகலரும் அறிந்து உஜ்ஜீவிக்கும்படி திருவரங்கந் திருப்பதியினின்று திருக்கார்த்திகையானதும் ஆழ்வார்திருநகரிக்குப் பயணமாகி ஆழ்வாரை எழுந்தருளிப் பண்ணிக்கொண்டுவந்து திருவாய்மொழி பாராயணம் நடத்தும்படி நியமித்தருளினார். அப்படிப் பெரியபெருமாள் அநுக்ரஹித்த நியமனத்தை ஶிரஸாவஹித்துக் கலியனும் திருக்கார்த்திகையானதும் திருவரங்கத்திலுள்ள கோயில் பரிஜநங்களுடன் ஆழ்வார் திருநகரிக்குப் பயணமாகி அங்குநின்று ஆழ்வாரை யெழுந்தருளப் பண்ணிக்கொண்டுவந்து ப்ரதிஸம்வத்ஸரமும் சுக்லபக்ஷ ஏகாதசி தொடங்கித் தினம் ஒவ்வொரு பத்து வீதம் திருவாய்மொழி பத்து பத்தையும் பத்துநாள் உத்ஸவத்தில் வடமொழி வேதத்தோடுகேட்பித்தருளித் திருவாய்மொழிக்கு வேதஸாம்யம் பெருமாள் திருவுள்ளம் பற்றியிருப்பதை ப்ரகாசிப்பித்தருளினார். இப்படி நிகழ்ந்து வாராநின்றமேற்படி உத்ஸவம் பிறகு காலக்ரமத்தில் நடந்தேறாமல் நின்று விட, வெகுகாலத்திற்குப்பின் நம் தர்சநஸ்தாபகாசாரியரான எம்பெருமானார் "பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே ஆள்கின்ற செங்கோலுடைய திருவரங்கச் செல்வனாரின்" திருவுள்ளத்தை யடியொற்றித் திருவாய்மொழியோடு மற்ற முதலாயிரம் முதலிய பிரபந்தங்கட்கும் வேத

ஸாம்யமுண்டென்பது ப்ரகாசிக்குமாறு மார்கழிமாஸத்துச் சுக்ல பக்ஷ ஏகாதசிக்கு முன்பு பத்து நாள்களில் முதலிரண்டாயிரத்தையும் ஸ்ரீவைகுண்ட ஏகாதசி தொடங்கிப் பத்துநாள்களில் திருவாய் மொழியாயிரத்தையும் திருவாய்மொழி முடிந்த மறுநாள் இயற்பாவாயிரத்தையும் நம்பெருமாள் வடமொழி வேதத்தோடு திருச்செவிசாத்தும்படி ஏற்பாடு செய்தருளினர். அப்படியேற்பாடு செய்கையில் திருக்கார்த்திகையானதும் ஸ்ரீரங்கத்திலுள்ள பரிஜனம் பலவற்றோடும் ஆழ்வார்திருநகரிக்குப் பயணமாகி நம்மாழ்வாரை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்து கலியனையும் முன்னிட்டு உத்ஸவத்தை விமர்சையாக நடப்பிக்கலானார். திருக்கார்த்திகையானதும் ஆழ்வாரை யெழுந்தருளப்பண்ணிக்கொண்டு வந்து திவ்யப்ரபந்தங்களைப் பெரியபெருமாள் திருச்செவிசாத்தியருளுங் காலவெல்லையே இந்தத் தென்மொழி வேதத்துக்கு அத்யயனோத்ஸ ஜர்னகாலமாகும். முதற் பத்துநாள்களில் நடக்கும் உத்ஸவம் மத்தியான்ன காலத்திற்குள் திவ்யப்ரபந்தத்தைப் பெருமாள் திருச்செவி சாத்தும்படி இருப்பதால், அது பகற்பத்து என்னவும், பின்பு ஸ்ரீவைகுண்ட ஏகாதசி தொடங்கி நடக்கும் உத்ஸவத்தில் திருவாய்மொழிப்ரபந்தம் இராத்திரியில் திருச்செவி சாத்தும்படியிருத்ததால், அது இராப்பத்து என்றும் வழங்குவதாயிற்று. இந்த உத்ஸவங்களில் வடமொழி வேதத்தோடொப்ப திவ்யப்ரபந்தங்களும் சேவிக்கப்பட்டுப் பெரிய பெருமாளால் மிகவும் திருவுள்ளவுகப்போடு திருச்செவி சாத்தப்படுவதால் இந்த உத்ஸவம் திருவத்யயன உத்ஸவமென்று பெரியோர்களால் வழங்கப்படுவதாயிற்று. (அத்யயனமென்றால்—வேதமோதுதல்) இப்படி நடந்து வராநின்ற உத்ஸவம் கால தௌஷ்ட்யத்தால் ஆழ்வார் திருநகரியினின்று ஆழ்வாரை எழுந்தருளப் பண்ணிக்கொண்டுவந்து நடத்துவது கஷ்டசாத்யமாய்விட பிற்காலத்துள்ள பெரியோர் திருவரங்கம் திருப்பதியில்தானே ஏறியருளப்பண்ணின நம்மாழ்வாரைக்கொண்டு மேற்படி உத்ஸவத்தைச் சிறப்பாக நடத்தலானார்கள்.

தமிழ் மொழியில் இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ் என்று வழங்குகிற மூவகைத்தமிழில் இயற்பா தவிர மற்றை மூவாயிரங்களும் இசைத்தமிழும் நாடகத்தமிழுமாகையால் அந்தப்ரபந்தங்

களை அறையர், பண்ணிசையோடு சேவிப்பதும் அபிநயிப்பதும், மற்றையோராயிரமும் இயற்றமிழென்பதை யாவரும் அறியுமாறு முன்னோர், இவற்றிற்கு இயற்பா (இயற்றமிழாலானபா) என்று நாமதேயமிட்டதற்கு ஏற்ப அவ்வாயிரத்தை அறையர் பண்ணிசையோடு சேவிப்பதில்லையாக, இதர ஸ்ரீவைஷ்ணவர்கள் பெருந்திரளாக இருந்து அநுசந்திக்க நம்பெருமாள் கட்டளையால் இன்னும் இருபத்தொருநாள்களில் திவ்யப்ரபந்தம் முழுவதையும் திருச்செவிசாத்துதல் நடந்துவருகின்றது.

இப்படி நடந்துவராநிற்கிற திருவத்யயநோத்ஸவத்தைத் திருவரங்கம் திருப்பதிக்குப்போய் சேவிக்கப்ராப்தியில்லாதவர்கள் அக்குறை யொருவாறு தீர மேற்படிஉத்ஸவம் பலதிவ்ய தேசங்களில் நடக்கின்றது. அந்த உத்ஸவம், ராஜதானியாய் ஸ்ரீகீதாசாரியன் எழுந்தருளிஇருக்கப்பெற்ற திருவல்லிக்கேணி என்ற ஸ்ரீகைரவிணீ க்ஷேத்திரத்தில் ப்ரதிஸம்வத்ஸரமும் தொண்டர்கள் கண்டு அகமகிழ்ந்துவாழுமாறு வெகு விமர்சையாக நடந்துவாரா நிற்கின்றது.

## தையில் மகம்

திருமழிசை கோ. க. அப்பன் இராமாநுஜாசாரியார்

திருமழிசைப்பிரான் 'த்வாதசமாஸே' என்றும் 'பன்னிருத்திங்கள் வயிற்றிற்கொண்ட' என்றும் சொல்லுகிறபடி ராம க்ருஷ்ணர்களைப்போலே, பன்னிரண்டு மாதம் கர்ப்பவாஸம்பண்ணி அவதரித்தார். இதைப்பற்றியே, திருமழிசை, சதுஶ்ஶாஸ்த்ர ப்ரவீணரான அண்ணுவப்பங்கார்ஸ்வாமி,

மாஸேத்வாதசகே முநீந்த்ரக்ருஹிணீ ஸா த்வாபரே தைஷ்யகே
ஸித்தார்த்திந்யஹிமாம்ஶுவாரஸஹிதே தாரே மகாக்யாதரே
ராகாயா அபரேத்யுரஸ்யஜகத: க்ஷேமாய ஸௌதர்ஶநம்
ப்ராஸூதோல்பவிவேஷ்டநாவ்ருததநும் பிண்டம் ப்ரசண்டார்சிஷம்

என்றும்அருளிச்செய்தார். இந்தஸ்லோகத்தின் தாத்பர்யம், த்வாபரயுகம்,ஸித்தார்த்திவருஷம்,தைமாதம்,ஞாயிற்றுக்கிழமை,ப்ரதமாதிதி யோகிகூடிய மகாநக்ஷத்திரத்திலே, பார்க்கவமுநீந்த்ரருடையபத்நி, பன்னிரண்டுமாதம் கர்ப்பம்தரித்திருந்து, பூலோகத்தின் க்ஷேமார்த்த

மாக, சக்ராம்ஶமாய், தோல்பையால் மறைக்கப்பட்ட ஆகாரத்தோடு கூடிய, மஹா தேஜஸ்ஸையுடைய பிண்டாகாரமான ஆழ்வாரைப் பெற்றாள் என்பது. இவ்வாறு பிறப்பிலும், தேஜஸ்ஸிலும் ஸ்ரீராம க்ருஷ்ணர்களுக்கு ஒப்பான ஆழ்வார், துஷ்டநிக்ரஹஶிஷ்ட பரிபால நம் பண்ணின அவர்களைப்போல், தாமும், பாஹ்யகுத்ருஷ்டி மதங் களை நிரஸித்து பரமஸாத்விகமான விஶிஷ்டாத்வைத மதத்தை ப்ரவ்ருத்திப்பித்தார்.

நான்முகன் திருவந்தாதி, திருச்சந்த விருத்தம் என்கிற இரண்டு ப்ரபந்தங்களாலும், தத்வஹித புருஷார்த்தங்களைச் சேதநர்களுடைய உஜ்ஜீவநார்த்தமாக அருளிச்செய்து, நம்புவியில் நாலாயிரத் தெழுநூறு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்து பிறகு பரமபதத்தை யடைந்தார். அநந்தரம், 'பின்னானார் வணங்குஞ் சோதி' என்கிற படியே, எம்பெருமான் விபவாவதாரத்திலே உதவப் பெறாதவர் களுக்காக அர்ச்சாவதாரமா யெழுந்தருளியிருக்குமாப்போலே, இவ்வாழ்வாரும் அர்ச்சாவதாரமாய் திருமழிசையில் எழுந்தருளி யிருக்கிறார். இவ்வாழ்வாருக்கு யுவஹ தைமீ 17ல (30-1-36) துடங்கி, பத்து தினங்கள் திவ்யோத்ஸவம் நடைபெற்று, தைமீ 26ல (8-2-36) தையில் மகத்தில், சாற்றுமுறை உத்ஸவம் மிகவும் விமர்சையாய் நடைபெற்றது.

## தையில் மகம்.
### பத்ராதிபர்.

தையில் மகத்தன்று இப்பத்ரிகை அவதரிக்கும்படி நேர்ந்தது ஒருபெரியபாக்யமே. அத்தினத்தைச் சிறிது ஆராய்வோமானால் அத்தினத்தில் அவதரித்த ஆழ்வாரின் பெருமையும் அவர் அவ தரித்த திவ்ய தேசத்தின் பெருமையும் நமது புத்திக்குத் தோன் றாமற் போகாது. ஏகஸம்பந்திஜ்ஞானம் அபரஸம்பந்திஸ்மாரக மன்றே! மற்ற தினங்களைக்காட்டிலும் இந்தத்தையில் மகத்திற்குண் டான ஏற்றத்தை மஹாநுபாவரான மாமுனிகள் துய்யமதிபெற்ற மழிசைப்பிரான் பிறந்தநாளென்று பேசியிருப்பது நன்குணரற் பாற்று—மாமுனிகள் மற்ற ஆழ்வார்களுக்கு அடைமொழி அரு ளிச்செய்யுங்கால் எப்புவியும் பேசுபுகழ்ப்பொய்கை என்றும் நற் றமிழால் நூல்செய்து நாட்டையுய்த்த பெற்றிமையோர் என்றும்

வாய்த்தபுகழ் மங்கையர்கோன் என்றும் தன்னுபுகழ் மாமறையோன் தொண்டரடிப்பொடி என்றும் அருளிச்செய்து இவ்வாழ்வாருக்கு அடைமொழி அருளிச்செய்யுமிடத்து துய்யமதிபெற்ற மழிசைப்பிரான் என்று அருளிச்செய்தமை ஆராயத்தகுந்ததே.

துய்யமதிஎன்பதை ஆராயுமிடத்து அதற்கு விருத்தமான மதிகள் சில உண்டென்பதும் அவைகளை நீக்கி துய்யமதியை இவ்வாழ்வார் பெற்றார் என்பதும் குறிக்கொள்ளத்தகுந்தது. இதை இவ்வாழ்வாரே * சாக்கியம் கற்றோம் சமணம் கற்றோமச்சங்கரனாராக்கிய ஆகமநூலாராய்ந்தோம் பாக்கியத்தால் செங்கட்கரியானைச் சேர்ந்தியாம் தீதிலோமெங்கட்கரிய தொன்றில் * என்ற பாசுரத்தினால் நன்கறிவித்திருக்கின்றார்.

தீயமதிகளை நன்கறிந்து அவற்றைக்காற்கடைக்கொண்டு துய்யமதியைப்பெறுவதே பெறுமையுடைத்து. அவ்வாறின்றி முதலடியிலேயே உண்டாகும் தூயமதி அவ்வளவு சிறப்புடையதாகாது. என்பது உற்றுணரத்தகும்.

மதியாவது மூன்று வகைப்படும். அதமம் மத்யமம் உத்தமம் என்று—அவைகளில் அதமமதியாவது தேவதாந்தரங்களுக்கு சேஷமென்றிருக்கை. மத்யமமதியாவது எல்லாம் அவன் மூர்த்தியாகையால் எல்லாத்தெய்வங்களுக்கும் நாம் சேஷமென்றிருக்கை. உத்தம மதியாவது எம்பெருமானுக்கே சேஷமென்றிருக்கை. அதையே துய்யமதி என்று மாமுனிகள் அருளிச்செய்தது— அந்யசேஷத்வம் கழிகையே ப்ரதானம் என்றும் விரோதி போயனுபவிக்கவேண்டும் என்றும் உலகாரியன் உலகுய்ய உபகரித்த ஸ்ரீஸூக்திகள் உத்கோஷிக்கின்றதும். இவ்வர்த்தத்தையே. இவ்வாழ்வாரும் நான்முகனை நாராயணன் படைத்தான் என்றும் தேருங்கால் தேவன் ஒருவனே என்றும் மெய்ப்பொருளை யானறிந்தவாறு என்றும் உபக்ரமித்து வேறொருவரில்லாமை நின்றான் என்றும் மாதவனை ஏத்தாதார் ஈனவரே என்றும் உன்னையன்றியிலேன் கண்டாய் என்றும் கூரம்பனல்லால் குறை இலை—என்றும்—விண்ணவற்கு நற்பொருள் நாராயணன் என்றும் ஆதிநெடுமால் அணைப்பார் கருத்தனாவான் என்றும் காகுத்தனல்லால் ஒரு தெய்வம்யானிலேன் என்றும் திருவில்லாத்தேவரைத் தேறேல்மின் என்றும் பெருங்

குருந்தம் சாய்த்தவனே என்னெஞ்சமானவர் என்றும் விடையேற்றான் வெவ்வினைதீர்த்தாயானுக்கு ஆக்கினேன் அன்பு என்றும் கவிக்குநிறைபொருளாய் நின்றானை நேர்பட்டேன் பார்க்கில் மறைப்பொருளும் அத்தனையே என்றும் நால்வேதமாத்தவமும் நாரணனே என்றும் கழற்காலமன்னனையே கண்ணனையே தொழக்காதல்பூண்டேன் என்றும் சொல்லுகிற மதியே துய்யமதி என்றும் சொல்லிலி அறியார் சமணர் அயர்த்தார் என்றும் ஏத்தாதார் ஈனவர் என்றும் மறந்தும் புறந்தொழாமாந்தர் என்றும் தேவதாந்தர விஷயமான மதிகளைக்கழித்து இனி யறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம் இனியறிந்தே னெம்பெருமானுன்னை இனியறிந்தேன் காரணன்நீ கற்றவை கற்பவைநீ நற்கிரிசை நாரணன்நீ நன்கறிந்தேன் நான் என்று முடித்திருக்கிற திவ்யப்ரபந்தத்தால் நன்கறிவித்திருக்கின்றனர்.

இது போலவே இவ்வாழ்வார் அவதரித்த திவ்யதேசத்தின் பெருமையும் உலகு மழிசையுமுள்ளுணர்ந்து என்கிற பாசுரத்திஞல் நன்கு விளங்காநிற்கும் இவ்வாழ்வாரின் பெருமையையும் அவரருளிச்செய்த திவ்யப்ரபந்தத்தின் பெருமையையும் அவரவதரித்த திவ்யக்ஷேத்ரத்தின் பெருமையையும் நாம் ஸ்மரிக்கும் படியாகச் செய்த இந்தத் தையில் மகத்தன்று இந்த இராமானுஜஸித்தாந்த வைஜயந்தியின் மூன்றாவது ஸஞ்சிகை வெளிவந்தது மிகவும் போற்றற்குரியதே.

---

## ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்தவைஜயந்தீக்ராஹக மஹாசயர்களுக்கு ஓர் விண்ணப்பம்.

இப்பத்ரிகையானது யதிஸார்வபௌமரான எம்பெருமானார்க்குப்பின் இரண்டு மாலைகளாகப் பிரிந்திருக்கின்ற உபயஸம்ப்ரதாயார்த்தங்களை நிஷ்பக்ஷபாதமாய் வெளியிட்டும் அவைகளுக்குண்டாயிருக்கும் ஐககண்ட்யத்தை யாவர்மதி தெரியப்படுத்தவும் உபயஸம்ப்ரதாயத்திலுமுள்ள மஹாவித்வான்கள் அநுக்ரஹிக்கும் விஷயங்களைச் சிரமேற்கொண்டு வெளியிடவும் அவ்வாறு வெளியிடுவதில் அதிவாதங்களில்லாமல் லோகோபகாரமான விஷயங்

களையே ப்ரசுரப்படுத்தவேண்டுமென்ற எண்ணத்துடன் ஆரம்பிக்கப் பட்டு இரண்டு ஸஞ்சிகைகள் வெளிவந்து இத்துடன் மூன்று ஸஞ்சிகைகள் ஆகின்றன. பத்ரிகையில் விஷயதானமருள வாக் களித்திருப்பதாகக் குறிப்பிட்டிருக்கும் ஸ்வாமிகள் ஸன்னிதி யில் அடியேன் நேரில்சென்று அடிபணிந்து வேண்டிக்கொண் டிருக்கிறேன். அவர்களும் விஷயதானம் செய்வதாக வாக்களித் திருந்தாலும் இதுகாறும் ஷை ஸ்வாமிகள் ஒருவரும் ஒருவிஷய மும் அநுக்ரஹிக்கவில்லை. அதற்கு அந்த ஸ்வாமிகளிடத்தில் யாதொருகுறைகளையும் கூறுவதற்கு அவகாசமும் லேசமும் கிடை யாது.—மத்பாபமே வாத்ரநிமித்தம் என்றுதான் சொல்லவேண்டும். இனிமேலாவது ஷை ஸ்வாமிகள் அறிவொன்றுமில்லாவடியே னுடைய குறைகளைக் குறிக்கொள்ளாமல் குறையொன்றுமில்லாத தங்கள் நிறைவுகளையே நினைத்து விஷயமருள்புரிய வேண்டுமென்று ஸாஷ்டாங்கப்ரணதிபூர்வகம் விண்ணப்பித்துக்கொள்கிறேன்.

இந்த நிலைமையில் பெருமாள்கோவில் ப்ரதிவாதிபயங்கரம் ஸ்ரீ உ. வே. அண்ணங்கராசார்யஸ்வாமி பொருளல்லாத வென்னைப் பொருளாக்கி அருளிச்செய்கிற விஷயங்களை மாத்திரமே அச்சிட்டு வருகிறேன் இவ்வாறு மற்றவர்கள் அநுக்ரஹிக்கும் விஷயங்களை யும் அச்சிடும்பாக்யம் அடியேனுக்குண்டாகும்படி அருள்செய்யு மவர்கள் எவரேலும் அவர்திறத்து தலையல்லால் கைமாறிலேன்.

அவ்வாறு விஷயதானம் அருள் செய்யுமவர்கள் கடிதத்தில் ஒரு பக்கத்தில் ஸ்பஷ்டமாக எழுதி அநுக்ரஹித்தால் அப்படியே அச்சடிக்கக் கொடுக்கப்படும். அவர்கள் அநுக்ரஹிக்கும் விஷயங் களில் ஏதாவது ஏற்றத்தாழ்வுகளேற்பட்டால் அவை விஷயதானம் செய்தவர்களைச் சேர்ந்ததே ஆகும். அதற்குப் பத்ராதிபர் ஒரு விதத்தாலும் உத்தரவாதியாகமாட்டார்.

இங்ஙனம்: ஸ்ரீவைஷ்ணவதாஸ பாததூளி

வடகரை : இராமாநுஜாசாரி.

பத்ராதிபர் S. R. S. வைஜயந்தீ.

---

ஸ்ரீ

## பாடப் பிறழ்வுகள்.

[பெருமாள் கோயில்

ப்ரதிவாதி பயங்கரம் ஸ்ரீ உ. வே. அண்ணங்கராசாரியார்]

ஸம்ஸாரிகளான நாம் உஜ்ஜீவிப்பதற்காக நமது பூர்வர்களான ஆழ்வார்களும் ஆசாரியர்களும் அருளிச்செய்துள்ள திவ்ய ஸ்ரீஸூக்திகளில் பல காரணங்களினால் பாடப் பிறழ்வுகள் ஏற்பட்டிருக்கின்றன. திவ்யப்ரபந்த மூலம், ஸ்தோத்ர பாடங்கள், ரஹஸ்யங்கள், ரஹஸ்ய வ்யாக்யானங்கள், அருளிச்செயல் வியாக்கியானங்கள் முதலிய ஸகல க்ரந்தங்களிலும் பல இடங்களில் உண்மையான பாடம் தவறி வேறான பாடம் வந்து புகுந்திருக்கின்றதென்பதை விவேகிகள் ஆராய்ந்து உணரவேண்டும்

உண்மையான பாடம் பிறழ்ந்து போவதற்குப் பல காரணங்களுண்டு ஞானமில்லாதவர்கள் தாங்கள் ஒருவிதமாக க்ரஹித்துப் பிறர்களுக்கும் அப்படியே சொல்லிவைப்பதனால் சில பிறழ்வுகள் ஞான முள்ளவர்களாகவே யிருந்தாலும் ஏதோ வொருவிதமாகத் தாங்கள் ப்ரமித்து ஒரு பாடத்தை ஆதரித்து அதையே ப்ரவசநம் செய்வதனால் சில பிறழ்வுகள் ஏடுபார்த்து எழுதுகிறவர்கள், ஹூ வூஊஹீ (பரம பரமார்த்தி)களாலே ஒருவிதமாக எழுதிவைத்து விட அதனால் சில பிறழ்வுகள். அச்சிடுங் காலத்தில் சொற்களிலே மாறுவதும் எழுத்துக்களும் பதங்களும் வாக்கியங்களும் விகாரப்படுவதும் விட்டுப்போவதும் ஆகிய இவற்றால் பல பிறழ்வுகள்

ஆகவிப்படிப் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகள் ஆங்காங்குப் பிறழ்வெய்தி யிருப்பதானது விபரீதமான அர்த்தங்களைத் தருவதற்கும் ஹேதுவாகின்றமையால் ப்ராமாணிகர்களாயும் சிறந்த விவேகிகளாயு முள்ள மஹான்களின் உதவியைக் கொண்டு பிழைதிருத்தங்களைப் ப்ரகாசப்படுத்திவைக்க வேண்டுமென்று நமக்குப் பெரிதும் ஆவலுள்ளது ஹூஉ வூஊஹ (பரம பரமார்த்த)ங்கள் எவர்களுக்குமே ஸம்பா

விதமாதலால் க்ரமமாகவேயுள்ள பாடத்தையும் சிலர் திருத்திவிடக் கூடும், ஆதலால் எதை உண்மையான பாடமென்று நம்புவது— என்று சிலர் கருதக்கூடும். மானிடராய்ப் பிறந்தாரெல்லார்க்கும் ப்ரம ப்ரமாத (பரம பரமாத)ங்கள் ஸஹஜங்களே யென்பதில் ஆக்ஷேபமில்லை. நம்முடைய ஸூக்ஷ்மமான புத்தியைக் கொண்டு திருத்தவேணுமென்பது நமது அபிப்ராயமன்று. தகுந்த ஆதாரங்கள் கிடைத்தால் அவற்றில் ஔசித்யம் தோன்றினால் திருத்துவது நலம் என்பதே நமது கருத்து.

திருக்கச்சி நம்பிகள் அருளிச் செய்த தேவராஜாஷ்டகத்தில் "ஸம்ஸார மருகாந்தாரே துர்வ்யாதி வ்யாக்ரபீஷணே! விஷய க்ஷுத்ர குல்மாட்யே த்ருஷாபாதப சாலிநி" ॥ என்கிற ச்லோகத்தில் முதல் மூன்று பாதங்களினுடைய முடிவும் ஏகாரமாக விருப்பதால் கடைசிபாதமும் அப்படியேதானிருக்க வேண்டுமென்றெண்ணியோ? வேறு காரணத்தினாலோ 'த்ருஷாபாதபசாலிநே" என்று பலரும் சொல்லிவருவது ப்ரஸித்தம். இப்படிப்பட்ட ச்லோகங்கள் மிக்க இளம் பிராயத்திலேயே கற்பிக்கப்படுவதால் ஈரமரத்தில் அடித்த ஆணிபோல் சிக்கன க்ரஹிக்கப்படுகிற பாடம் ப்ராணுடிதபம் பெற்ற வளவிலும் மாறமாட்டாமல் நிற்கிறது. சிறந்த வித்வான்களாகவுள்ளவர்கள் அநுஸந்தித்தாலும் அதில் ஒரு ஆராய்ச்சியின்றியே பால்ய பாடப்படியே அநுஸந்தித்து வருவதைக் காணுகின்றோம். இது பிழையல்லவா? என்று உணர்த்தினால் ஆமாமென்று இசைகின்றார்கள். ஆனாலும் மறுபடியும் பழையபாடமே அவர்களுடைய வாக்கில் வந்துவிடும். இதை பாதிதாநுவ்ருத்தி (பாதிதாநு வருத்தி) யென்பார்கள்.

மணவாளமாமுனிகளின் திநசர்யை, யதிராஜவிம்சதி முதலான ஸ்துதிகளும் இளம்பிராயத்திலேயே கற்பிக்கப்படுவதால் அவற்றிலும் எவ்வளவோ பாடபேதங்கள் ஏற்பட்டிருக்கின்றன. உத்தரதிநசர்யையின் முடிவில்

"ஸம்வத்ஸரே வ்வாநுகுணேவ யஸ்மிந்
ஸௌம்யே த்ரயோத்ர தந: ப்ரஸாத: ।
ஸிம்ஹஸ்தம் தேவதேவ தேவம்
ப்ராப்தம் ப்ரபோ: ஸஹஸ்ருஷ்டி ॥"

ஸ்வபத ஸ்வரூபாநுகுணவயஸம் இந
ஸர்வோத்தரோ யதிரமந ப்ரஸாத |
ஸத்பிஸ்ஸமம் தைவதமேவ தேஶம்
ப்ராபத்தம் ப்ரபத்யே பவதங்க்ரிமூலம் ||

என்கிற ஶ்லோகம் அநுஸந்திக்கப்பட்டு வருவது அனைவர்க்கும் தெரியும். இதற்கு என்ன அர்த்தமென்று நாம் பல பண்டிதர்களைக் கேட்பதுண்டு; இப்போதும் கேட்கிறோம். அதிலுள்ள பாடப்பிழையைத் திருத்தாமல் அர்த்தஞ் சொல்ல முடியுமா? என்று பாருங்கள். எத்தனையோ பதிப்புகள் அச்சாகியிருக்கின்றதே, ஒன்றிலாவது உண்மையான பாடம் காணப்படுகிறதா வென்றும் பாருங்கள். இது ஒரு சிறிய த்ருஷ்டாந்தமாகக் காட்டப்பட்டது. இப்படியே ஆழ்வான் பட்டர் முதலானோர் அருளிய பஞ்சஸ்தவாதி(தி)களிலும் பல பிறழ்வுகள் நெடுநாளைக்கு முன்னமே நேர்ந்துவிட்டன என்பதும் க்ரமேண நிரூபிக்கப்படும்.

காலக்ஷேப க்ரந்தங்களாகவுள்ள வியாக்யான க்ரந்தங்களில் உள்ள பிறழ்வுகளை யெல்லாம் இந்தப் பத்ரிகை மூலமாகத் திருத்த வேணுமென்கிற நமது ஆவலைப் பல மஹான்கள் பூர்த்தி செய்வித்தருளவேணும். எல்லாம் திருத்தமாகவே அச்சிடப்பட்டிருக்கின்றதென்றும், புதிதாக யாதொரு திருத்தமும் செய்ய வேண்டியதில்லையென்றும் சொல்லுமவர்களைப் பற்றி நாம் யாதொன்றும் சொல்லுகின்றிலோம். அச்சுப் புத்தகங்களில் பல பாடப்பிழைகள் புகுந்துவிட்டன என்பதை இசைந்து அவற்றைத் திருத்தியருளத் திருவுள்ளம் பற்றியிருக்கும் மஹான்கள் தம்தமக்குத் தெரிந்த திருத்தங்களை உதவியருளவேணும்.

ஒரு அக்ஷரம் மாறிவிடுவதனால் மஹத்தான க்ஷோபம் உண்டாய்விடுகிறதென்பதை நாம் சொல்லவேணுமோ? சிறியவுதாஹரண மொன்று காண்மின்,—ஆசார்ய ஹ்ருதயத்தில் நாரை கொக்கு குருகுகளுக்கு ஸ்வாபதேச மருளிச்செய்கிற "ஆசறுதூவி யென்னும்" என்கிற சூர்ணிகையின் ஜீயர் வியாக்கியானத்தில், ‘தாய் வாயிலுண்ணும் பிள்ளைக்கு இரைதேடி" என்ற வாக்கியத்திற்குப் பொருள் விவரிக்குமிடத்தில்

"தங்கள் வாக்கால் உபகரிக்கும் பகவத் விஷயத்தை உபஜீவித்திருக்கும் குறைச்சரக்கான் சிஷ்யர்களுக்குபாயாந்துகுணமாக ஸாதம்யமான பகவத் விஷயார்த்தங்களை சாஸ்த்ரங்களிலே ஆராய்ந்து உபகரித்து"

என்கிற ஸ்ரீஸூக்தியில் "சிஷ்யர்களுக்குபாயாந்து குணமாக" என்கிற வாக்கிற்கு என்ன அர்த்தம் என்று ஆராய்ந்து பாருங்கள். பல ஸ்வாமிகளை அடியேன் கேட்டிருக்கிறேன், 'உபாயாந்து குணமாக' என்றது அந்வயியாததான, 'வயோந்து குணமாக' என்றிருக்கும்—என்று சிலர் ஸாதித்தார்கள் எப்படியும் திருத்த வேண்டியது ஆவச்யகமே என்பதை அனைவரும் அங்கீகரிப்பார்கள் நம்முடைய புத்தியைக் கொண்டு நாம் ஸ்வதந்திரமாகத் திருத்துவதற் காட்டிலும் ஓலை ஸ்ரீகோசத்தைக் கொண்டு திருத்தலாமென்று பார்த்தபோது, ஸுப ரஸித்ராக எழுந்தருளியிருந்த ஸ்ரீ காரப்பங்காடு சிங்கப்பெருமாள் ஸ்வாமி, ஓலை ஸ்ரீகோசத்திலிருந்து தாம் திருத்தியிருப்பதாக ஸாதித்து

யகாரஸ்தானே ககாரஸ் ஸாஹ்ய:
டகாரஸ்தானே ககாரபாட்ய

என்றருளிச் செய்தார் அதாவது—' சிஷ்யர்களுக்கு பாயாந்துகுணமாக" என்பதை ' சிஷ்யர்களுக்கு பாகாந்து குணமாக " என்று திருத்தவேணு மென்று ஸாதித்தபடி இப்போது எவ்வளவு அழகாக அர்த்தமாகிறதென்று பாருங்கள் சிஷ்யர்களுடைய ஜ்ஞான பாகத்திற்குத் தகுந்தபடி ஆசார்யர்கள் ஆராய்ந்து உபதேசிப்பார்களென்று சொல்வது மிகவும் பொருத்தமானதன்றோ ககாரத்தை யகாரமாக மாற்றிவிட்டதனால் உண்டான க்லேசம் எவ்வளவென்று பார்க்க.

திருப்பாவையின் வியாக்கியான அவதாரிகையிலே—

"தானும் பாபத பௌவநரைய அவர்களுக்கும் பௌவநம் வந்து தலைக்கட்டினவாறே"

என்கிற ஸ்ரீஸூக்தி காணப்படுகிறது இப்படியே பல பதிப்புகளை ஏறிவிட்டன (ஆய்ச்சிகளுக்கு) பௌவநம் வந்து தலைக்கட்டினதாக இங்குக்காண்கிறது இப்படியே காலக்ஷேபகர்களான ஸ்வாமிகளும் ஸாதித்துவரக் காண்கிறோம் பௌவநம் வந்து தலைக்கட்டிற

றெனாலும் என்ன ஆரதம் என்பதை ஆலோசியாமலும் அந்த ஸ்ரீஸூக்தியில் ஒரு விப்ரதிபத்தியுமில்லாமலும் இருந்து வருகிறோம் நம்பெருமாள் ஸந்நிதியில் அரையர் திருப்பாவை வ்யாக்யானம் ஸேவிக்கும்போது குறிக்கொண்டு கேட்டிருக்கையில்

"யௌவநம் வந்து தலைகாட்டினவாறே"

என்று ஸேவிக்கக் கேட்டுப் பரமாநந்த மடைந்தோம் ஓலை ஸ்ரீகோசங்களில் கா என்னும் எழுத்தைக் கட்டெழுத்தாக எழுதினால் க்க என்றும் வாசிக்க நேர்ந்துவிடுகிறது அவ்விதமாக நேர்ந்த பிறழ்வே இது இந்த விஷயம் ஸ்வல்பமேயானாலும் ரஸபங்கம் வாசாமகோசரமன்றோ இங்ஙனே காட்டக்கூடிய பிறழ்வுகள் பலபல இருப்பதனால் பெரியோர்களிடம் நாம் கேட்டவற்றை க்ரமேண எழுதிவருவோம், இங்ஙனமே மற்றும் பல மஹான்களும் தாம்தாம் க்ரஹித்துள்ள திருத்தங்களை இப்பத்திரிகை வாயிலாக ரஸிகர்களுக்கு உபகரிக்கவேணும்

---

T S ராமானுஜாசார்யர்

## வடகரை இராமானுஜாசாரியாருக்கு எழுதிய பத்ரிகை

13. ஆனைகட்டி வீதி,
சின்ன காஞ்சீபுரம்.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமானுஜாய நம

தாஸஸ்யாநந்த ப்ரணதி பூர்விகேயம் விஜ்ஞப்தி

உபய குசலோபரி

தேவரீர் அனுப்பிய மூன்று பத்திரிகையும் வந்து சேர்ந்தன. ரொம்பவும் ஸந்தோஷம் அதில் திருக்கோட்டியூர் ஸ்வாமியையும் விஷயதானம் செய்பவரில் ஒருவராக எழுதப்பட்டிருக்கிறது அது ஸரியல்ல என்பதாகாகவே இப்பொழுது அடியேன் விஞாபிப்பது தேவரீர் இங்கு எளுளியிருந்த ஸமயம் அந்த ஸ்வாமியின் திருமாளி

கைககு ஏளளி விகஞாபிததெதலலாம ஞாபகமிருககலாம. இருந தாலும அடியேன ஞாபகபபடுததுகிறேன. அதாவது—அணணங கராசாாஸவாமி தேசிகஸூகதி விஜயதவஜமாலா எனறு ஒரு பத திரிகை பிரசுரிதது அதறகு தேவரீரை காரியதரிசியாக ஏறபடுததிய தாக தேவரீரிடததில ஸாதிததாகவும அதறகு தேவரீர இந சணடைப பததிரிகைகளுககு நான காரியதரிசியாக இருககமாட டேன ஆனால சணடையிலலாமல ராமானுஜ ஸிததாநத வைஜயநதீ எனறு ஒரு பததிரிகை ஆரமபிதது நடததலாமெனறு சொனன தாகவும அவரும அதறகு ஸரி எனறு ஆமோதிததாயும ஆதலால அபபததிரிகை நடததபபோவதாயும அதறகு ஏதாவது விஷய தானம செயய வேணடுமெனவும பிராததிததீர ஆனால அநத ஸவாமி நான ஒரு பததிரிகைககும விஷயம எழுதுவதிலலை. எனககு கலஹஙகளை பிடிபபதிலலை நான எழுதினால அதில யாராவது தபபு கணடுபிடிதது புஸதகம எழுதுவாரகளெனறும அபபுறம பிரகிருதி வாஸனைபபால எனககும் எழுததோனறும ஆத லால நான எழுதுகிற வமபுககே போகமாடடேன எனனை வாயால சொலலச சொனனால எவவளவு வேணடுமானாலும சொலலுகிறேன எனறு ஸாதிததார அதறகு தேவரீரும அதை ஒததுககொணடு இநத சணடைகளை எனககு பிடிபபதிலலை அணணஙகராசசாரியார ஸவாமியையும சணடை வேணடாமெனவும தடுததுவருவதாயும சொலலிவிடடு எழுநது போயவிடடீர இபபொழுதோ எனறால முதல புஸதகம அநேஞகபததிலேயே தேவரீரே சணடைககி ககசம கடடிவிடடீர அதுபோனாலும பொது விஷயஙகளையே அநத பததிரிகையில பிரசுரிககப போகிறேனெனறு சொலலிவிடடு இபபொழுது சணடைககு விஷயமான வியாஸம ஒனறு எழுதி யிருககிறது அதாவது ஒரு வியாஸததில பகவானுடைய பாதார விநதமடைவதற்கு ஸமபநத ஞானம ஒனறே போதும் வேறு ஒனறும வேணடாமெனறு எழுதியிருக்கிறது இது கலஹாஸ பதமே எனறு தேவரீரே அறிநதிருககும இபபேர்பட்ட விஷயத்தை பிரசுரிததுவிடடு விஷயதானம செயயமாடடேனெனறு ஸாதிதத ஸவாமி திருநாமததையும விஷயதானம செயபவராக எழுதபபட டிருககிறது தேவரீர ரொமப ஸாதவிகர எனறு எணணியிருந்தேன். ஆனால ஸஹவாஸ தோஷம தேவரீர எனன செயயும பாவம, தேவரீர தேசிக ஸ்ரீஸூகதி ஸமரக்ஷண ஸபை பததிரிகைககு

ஏதோ எழுதியிருந்ததாயும் அவர்கள் ஸரியாக பிரசுரிக்கவில்லை யென்றும் எழுதியிருக்கிறது அவர்கள்மேல் குற்றம் சாட்டுவதால் தேவரீர் எந்த விஷயமாயிருந்தாலும் பிரசுரிக்குமென்று தோன்று கிறது ஆதலால் இதை அவசியம் தேவரீர் பத்திரிகையில் பிரசு ரிக்க வேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறேன்

இப்படிக்கு,
T S ராமாநுஜ
காஞ்சீ.

சரியானபாதி

---

## வடகரை இராமாநுஜாசாரியார்.

## T. S ராமாநுஜாசாரியாருக்கு எழுதிய பத்திரிகை

25, ஆசாரப்பன் தெரு,
சென்னை.
6—2—36

ஸ்ரீ
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

அடியேன் வடகரை ராமாநுஜாய தாஸன் தாளுந்தடக்கை யுங்கூப்பிப் பணிந்துசெய்யும் விண்ணப்பம் உபய குசலம் சீல மில்லாச் சிறியனை அடியேனைப் பொருளாக்கி அநுக்ரஹித்த திரு முகத்தைச் சிரஸால் வஹித்துப் பேரானந்த மடைந்தேன் அடி யேன் பெருமாள் கோவிலுக்கு விடை கொண்டிருந்த காலத் தில் ஸ்ரீ ஸ்வாமி ஸந்நிதியில் பத்ரிகைக்கு விஷயதான மருள வேண்டும் என்று வேண்டிக்கொண்ட காலத்தில் ஸ்வாமிக்கும் அடி யேனுக்கும் நடந்த ஸல்லாபங்களில் சில விஷயங்கள் மாத்திரமே ஸ்வாமி திருமுகத்தில் அநுவதிக்கப்பட்டிருக்கிறது அதைச்சிறிது ஆலோசித்தால் அத்திருமுகம் ஸ்ரீ ஸ்வாமியுடன் கலந்து அநுக்ர ஹித்ததாகக் காணப்படவில்லை தேவரீரும் அன்று அவ்விடமிருந்த தாகவே நினைக்கின்றேன் அவ்வாறிருந்திருந்தால் இவ்வாறு அநுக்ர ஹிக்க இயலாது. ஒருசமயம் மறந்திருக்கலாம் என்றும் எண்ணுவ

தறகிடமாகினறது ஆதலால அதுவிஷயததைத "ஸமாரயேதவாம நமபிக்ஷயே" அதாவது ஸ்ரீ ஸவாமி ஸ்னனிதிககு அடியேன விடை கொணடிருநத காலததில் ரஹஸயதரய ஸாரத்தில மூலமநதராதி காரம காலக்ஷேபம நடநதுகொணடிருநததாக ஞாபகம அசசமயம தேவரீரும இனனும 2, 3, திருநாமஙகள எழுநதருளியிருநதாாகள அவாகளை அடியேன இனனாரெனறறியேன அதுசமயம அடியேன ஒரு விளமபரப பதரிகையையும ஸ்ரீ ஸவாமி ஸனனிதியில ஸமாப பிதது இபபதரிகை ஸ்ரீ ஸவாமி அநுகாஹததிறகு பாதரமாமபடி கருபை பணணவேணடுமெனறு வேணடிககொணடேன அதறகு ஸ்ரீ ஸவாமி நான ஒரு பதரிகைககும விஷயதானம செயவதிலலை இதறகும நான ஒனறும செயயமாடடேன எனறும சொலலிக கடைசியாக திருககுடநதைககு எழுநதருளியிருநதகாலதது நடநத தொரு விருததாநததததைச சொலலியருளி அவரவாகளுககு அவ ரவாகள ஸமபரதாயததில அபிமாநமிலலாமற போகாது அபபடி ஏதாவது அவசமாயச சொனனாலும அதையும குறறமாகக கணடிக கக கஙகணம கடடிககொணடு திரியுமவாகள சிலரிருகக நீ ஏன எனனை இவவாறு நிாபபநதிககிறாய எனறு நியமிததருளினா அதறகு அடியேன அவவாறு பக்ஷபாதமிருபபது ஆவஶயகமே அதுவும இபபதரிகையில வெளிவர வேணடியதுதானே ? எனறு வேணடிககொணடேன அதனமேரில ஸ்ரீஸவாமி அடியேனைப பூாண மாகக் கடாக்ஷிதது நீ, நினைததபடி எலலாம உனககுக கைகூடும் இபபதரிகையும ஒழுஙகாக நடைபெறும நானும எபபோதாவது படடணம வருவேன வநத காலததில, உன பதரிகைக்கு விஷய மும தானம செயகிறேன எனறும' அநுக்ரஹித்தருளினா அவ் வாாததையை அடியேன "மாய னனறு தெயவததேரினில செபபிய மெயமமைப பெருவார்த்தை" போலவே நமபி விடைகொணடு வந திருக்கின்றேனாதலால் பத்ரிகையிலும ஸ்ரீ ஸவாமி திருநாமததைக குறிபபிடவும நேரிட்டது இது நிறக, அருஞ்சகயததில ஸ்ரீ உ வே கோபாலாசாாய ஸவாமிககும அடியேனுககும நடநத வாத பரதிவாதமான பதரிகைகளை அசசிடபபடடிருககிறது அதில அடி யேன சிறறறிவிறகு விஷயமான பூாவாசாாயாகள அருளிசசெயத ஆாததஙகளையே விணணபபிதது்க கொணடிருககிறேன அதில ஏதா வது விருததமாக ஸ்ரீ ஸவாமி திருவுளளம பறறினால அதையும

பதரிகை மூலம பரசாரம செயகிறேன மேல இரண்டு ஸஞ்சிகை களிலும ஸ்ரீ உ வே அண்ணங்கராசாரியார அநுகரஹிதத விஷயங களே "அதில பகவானுடைய பாதாரவிநத மடைவதறகு ஸமபநத ஜஞாநம ஒனறே போதும. வேறு ஒனறும வேணடாம" எனறு எழுதியிருககிறதாகவும அது கலஹாஸபத மெனறும ஸவாமி திரு வுளளம பறறியிருபபதாக அநுகரஹிககப படடிருககிறது அது ஸ்ரீ அணணஙகாசாரய ஸவாமி அநுகரஹித்த விஷயமே அடி யேன அறிககதும அபபடியே அது ஒனறு போதாது வேறும சில வேணடுமெனறு தேவரீர திருவுளளமானாலும மிகவும அழகியதே பகவதவிஷயததில நாம எவவளவுசெயதாலும அவன செயயும உப காரததிறகு போதுமெனறு நினைபபதும பொருநதாதே ஆதலின ஒரு அபிபராயததால போதுமெனறு நினைககவும கூடும மறறொரு அபிபராயததால அது போதாது எனறு நினைககவும பராபதம ஆதலின இவவிரணடு அபிபராயஙகளும அழகியதாகவே அடியே னுககுக காணபபடுகினறது, ஒருககால ஸவாமி திருவுளளததிறகுத தவறாயிருநதாலும சரியானதொரு அரததததை அநுகரஹிததா லும அதையும வைஜயநதியின வாயிலாய பரசுரபபடுததி தநயனா வேன தேவரீர அநுகரஹிதத திருமுகததையும அடியேன விண ணபிததுககொணட இபபதரிகையையும இநத மாதததில தையில மகததனறே வைஜயநதீ அகில ஸ்ரீ வைஷணவாகளு மறியுமாறு பரசாரம செயய ஆரமபிககும இவவாறு அடியேனுககு ஹிதமான அமுதமொழிகளை அடிககடி அநுகரஹிகக வேணடுமபடி ஸ்ரீ ஸவாமி ஸனனிதியில அடியேனுககாகத தேவரீர பராரததிகக வேணடுகி றேன. வாசிகதோஷாஃ க்ஷந்தவ்யாஃ

இஙஙனம அடியேன வடகரை,
ராமாநுஜாய தாஸஃ

பத்ராதிபர S. R S வைஜயந்தீ.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீவானமாமலை ராமாநுஜஸ்வாமி திருவடியான
வடகரை இராமாநுஜாசாரியரால் எழுதப்பட்டது

# புருஷகாரவைபவம்.

நமஶ்ரீரங்கநாயகயை யத்ப்ரூவிப்ரமபேதத: ।
ஈஶேஶிதவ்யவைஷம்ய நிம்நோந்நதமிதம்ஜகத் ॥

## புருஷகார ஶப்தார்த்தம்

புருஷம், கரோதி இதிபுருஷகார: புருஷகாரஸ்ய வைபவம் புருஷகார வைபவம் என்று விரியும்

பூர்ணத்வாத்புருஷ: என்கிற நிருக்தியினாலே தயை, வாத்ஸல்யம் முதலான குணங்களால் பூர்ணன் புருஷ ஶப்தத்தால் சொல்லப் படுகிறான் ஆதலின் சேதனன் செய்த பாவங்களைப்பார்த்து ஸ்வதந்த்ரனான ஸர்வேஶ்வரன் ஒருக்கால் "க்ஷிபாமி அஜஸ்ரம் அஶுபாந் ஆஸுரீஷ்வேவ யோநிஷு" (அசுபமான காமங்களைச் செய்தவர்களை பாபயோனிகளில் தள்ளிவிடுவேன்) என்று சீற்றமுடையனாயிருந் தானேயாகில் அச்சீற்றத்தையும் அதற்கடியான ஸ்வாதந்த்ர்யத் தையும் தலை சாயப்பண்ணி தயை முதலான குணங்களை தலை யெடுக்கும்படி செய்கை புருஷகாரமாகும்

அன்றிக்கே பரு பாலநபூரணயோ: என்கிற தாதுவினாலுண் டான புருஷ ஶப்தமானது, ரக்ஷிக்கிறவனைச்சொல்லுகிறது இத் தாலே மஹாபராதத்தைப் பண்ணின சேதனனை ரக்ஷித்தல்லது நிற்க ஒண்ணாதபடி கோபித்துத் தலைப்பறுக்கத் தயாராயிருக்குமவனை "கருப்யா பாபபால்யத" என்கிறபடி ரக்ஷகனாகப் பண்ணுகை புருஷ காரமென்று சொல்ல வடுக்கும்—இவ்விரண்டு வ்யுத்பத்திகளாலும் ஈஶ்வரன் விஷயத்தில் பண்ணும் புருஷகாரம் சொல்லிற்றாயிற்று

புர அக்ரகமநே என்கிற தாதுவில் வ்யுத்பந்நமான புருஷ ஶப்தமானது அபிமுகமாகச் செல்பவனைச் சொல்லாநிற்கும் இதனால் ஏற்படும் அர்த்தம் யாதெனில்? பரமகாருணிகனான ஸர்வேஶ்வரன் நிர்ஹேதுகமான தன்னுடைய க்ருபையினாலே சேதனனைப் பெற நினைக்கும்போது அநாதிகாலம் பண்ணிப்போந்த பாபவாஸனையால் அவனுடைய "த்வம்மே அஹம்மே" (நீ எனக்கு சேஷபூதன் என்றால் நான் எனக்கு சேஷபூதன் என்று எதிரம்புகோத்து அலம்புரிந்த நெடுந்தடக்கைக்கும் எட்டாதபடி கைகழிய ஓடி விழுகனாயத்திரியும்

சேதனனை உபதேஶாதிகளால அவனுககு அபிமுகனுமபடி பண ணுகை இது சேதனன விஷயததில பணணும புருஷகாரமாகும

இபபுருஷகாரததைச செயவதறகு 'தேவதேவோ ஹரி பிதா" எனறும 'பூதாநாம அவயய பிதா' எனறும சொலலபபடுகிற ஜகதபிதாவான ஸாவேஶ்வரன விஷயததிலும, பராஜைகளான சேதனாகள விஷயததிலும 'தவமமாதா ஸாவலோகாநாம" எனகிற படி ஸமஸதமான சேதனாகளுககும தாயாய 'விஷ்ணுபதநீ" எனகிறபடி அவனுககுப பததியாயுமிருககிற பெரியபிராட்டியாரே உரியவள

இவள சேதனாகளுககு "தவம்மாதா எனகிறபடி நிருபாதிக தாயாய சேதநாகளுடைய கலேஶம பொறுககக கிலலாதவளாய ஸதநநதயபராஜைககுததான மருநதுணணும மாதாவைபபோலேயும "கூபததில வீழும குழவியுடன குதிதது அவவாபததைத தீககும அனனைபோலேயும" இவாகளுககாகததான நாட்டில பிறநது படாதன படுமபடியான பரம தயையை யுடையவளாகையாலும சேதனாகளுடைய 'நினறவா நிலலா நெஞசில' ஜநமாநதர ஸஹஸரங களில இவன புததிபூரவகமாகச செயயாததாயும அவன திரு வுளளததால நினைககபபட்டதுமான யாதருசசிக ஸுகருதவிஶேஷ மடியாக பகவதவிஷயததில அதவேஷ ஆபிமுகயஙகளுணடாய ஆஶ்ரயிகக இசசையுணடானால அசசமயம இவள ஸாநநிதயம உணடோ? இலலையோ? எனறு ஶஙகிககவொணணாதபடி "அகல கிலலேன இறையுமெனறு" ஒருமாநொடியும பிரியாமல நிதய வாஸம பணணுமவளாயும "பிததா பனிமலாமேலபாவைககு" எனகிறபடி ஸவாணமயமான மருகததை "ஆநயைநம மஹாபாஹோ கீடாாததம நோ பவிஷயதி" (நீணடகைகளையுடையாய இம மானைககொணாநது தரககடவாய நமககு லீலையின பொருட்டு ஆகும) எனறு அவளகேடக இளையபெருமாள இது மாயாமருகம எனறு தெரிவிததாலும தானும இது மாயாமருகமெனறு அறியும படியான அறிவுடையவனாயிருககச செயதேயும, அவளுடைய "ஏவம பருவாணம சாருதஸதம பரதிவாாய ஶுசிஸமிதா" எனகிற மநதஹாஸததில மயஙகி அவளசொனனபடி செயதலலது நிறக வொணணாதபடி இனிய விஷயமாயிருககையாலும அவளசெயயும புருஷகாரமே கணணழிவறற புருஷகாரமாகும

இபபுருஷகாரததிறகு கருபை பாரதநதரியம அநநயாாஹத வம ஆகிய மூனறுகுணஙகள அதயாவஶயகஙகளாக ஆகும.

கருபையாவது பரதுககததை ஸஹியாமல மிகவும வருந துதல அதாவது நிருபாதிகமாதருதவ பரயுகதமான ஸமபந தததால சேதனாகள படும துககம தனனுடைய துககமாய அத துக்கம் இனிபபிதுககவவருகிலலை எனனுமபடி ஸஹிககமாடடாத தனமையுடையளாயிருக்கை

பாரதநதரியமாவது பர (இதர) தநதர (பரதாந) ஸய ஸ பரதநதர (யாவனொருவனுககு பரதானமானவன அநயனோ அவன பரதநதரன) தஸய (அவனுடைய) பாவ (தனமை) பாரதநதரியம அதாவது தனனபேகஷிதததை அவனைககொணடே செயதுகொளள வேணடுமபடியாயுளள ஸவருபததையுடையளா யிருககை.

அநநயாாஹதவமாவது அநயஸய (வேறொருவனுககு) ஆாஹ (போகயனாயிருபபவன) அநயாாஹ (மறறொருவறகு யோகயமானவன) அநயாாஹோநபவதி இதி (மறறொருவறகு யோகயனுக்கு ஆகாதவள) அநநயாாஹ (அநநயாாஹன), அநநயாா ஹஸய பாவ (அநநயாாஹனுடைய தனமை) அநநயாாஹதவம— அதாவது அவனையலலது மறறொருவாககு யோகயமலலாத தனமை யுடையளாயிருததல

கருபை சேதநாகளுடைய துககம கணடு பொருககமாடடாத தனமையளாய ஈஶவரனோடு சேதனாகளைச சோபபிககைககு உரியது

கருபையுண்டானாலும தான ஸவதநதரமாய சேதநரகஷணத தில பரவருததியாமைககும அவனை பரவாததிபபிககைககும பார தநதரியம வேணும

இவள் நமமையலலது மறறொருவாககு யோகயை யலலாதவ ளாகையால இவள அபேகஷிதததை தலைககடடுவது நமககனறோ கடமை எனறு இவளபேக்ஷிததததைச செயகைககு அநநயாாஹதவம ஆவஶயகம

கருணை பரமகாருணிகனான ஸாவேஶவரனிடததிலுமுளளதே யாயினும அவனுடைய கருபைககும இவளுடைய கருபைககும வெறுபாடியுணடு

ஈஶ்வரன் நிரங்குசமான ஸ்வாதந்த்ரியமுடையனாய் சேதநா-களுடைய புண்யபாபங்களை நிறுத்து நிக்ரஹாநுக்ரஹங்களைப் பண்ணக்கடவனாயிருக்கையால் அவனுடைய கருணை ஸ்வாதந்த்ரியத்தால் அமுக்குண்டு ஓரோர் சமயங்களில் தலைகாட்டுமதாயிருக்கும். இவள் "காருண்யரூபயா" என்கிறபடி காருண்யமே வடிவெடுத்து வந்தாற்போலிருக்கையாலும் இவள் கருணையைத் தடுக்க வேறொன்றுமில்லாமையாலும் நிருபாதிகமாய் தருத்வஸம்யுக்தமாகையாலும் இவளுடைய கருணை வாசாமகோசரமாயிருக்கும்.

இவ்விடத்தில் "மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத் அகர்ஹிதம்" (மித்ரபாவத்தோடு வந்தடைந்தவனை வருந்தியும் விட சக்தனல்லேன். அவனிடத்தில் என்னுடைய புத்தியால் தோஷம் கிடையாது. உங்கள் புத்தியால் தோஷமுண்டாயிருந்தாலும் வாத்ஸல்யாதி குணங்களையுடைய எனக்கு அது போக்யமாயே இருக்கும்) என்றும் "என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார்" என்றும் சொல்லும் ஸ்வபாவனான ஸர்வேஶ்வரனுடைய நாராயணத்வப்ரயுக்தமான ஸ்வாபாவிக ஸம்பந்த ஜ்ஞானமுடைய சேதநனுக்கு ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயிக்கும்போது புருஷகாரம் வேண்டுவானேன்? என்று சங்கிக்கக்கூடும். அநாதிகாலம் அபராதத்தைப் பண்ணிப்போந்த இச்சேதநன் ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயிக்கும்போது அவனுடைய ஸ்வாமித்வ ஸௌலப்ய ஸௌஶீல்ய வாத்ஸல்யாதிகுணங்களை ஶாஸ்த்ரமுகத்தாலும் ஆசார்யோபதேசாதிகளாலும் அறிந்திருக்கச்செய்தேயும் அவனுடைய நிரங்குஶ ஸ்வாதந்த்ரியத்தினாலே புபஸ்தவ ப்ரயுக்தமான பித்ருத்வ ஸம்பந்தத்தால், பரிபூர்ணமாக பாபத்தைச்செய்த சேதநன் விஷயத்தில் ஒருகால் நீரிலே நெருப்புக்கிளருமாப்போலே குளிர்ந்த திருவுள்ளத்தில் சீற்றமுண்டாய் ஹிதரூபமான தண்டனையைச் செய்யவும் கூடும் என்று அஞ்சி அவ்வபராதங்களை மறப்பித்து ஸ்வாதந்த்ரியம் தலைசாய்ந்து வாத்ஸல்யாதிகுணங்கள் தலையெடுக்கும்படி செய்து அவனை ஸ்வீகரிக்கைக்கு புருஷகாரம் அபேக்ஷிதம்.

இவ்வாறு புருஷகாரம் அபேக்ஷிதமானாலும் "பிதாமஹம் நாதமுநிம் விலோக்ய ப்ரஸீத மத்வ்ருத்தமசிந்தயித்வா" (என்னுடைய வ்ருத்தத்தைச் சிந்திக்காமல் என்னுடைய பிதாமஹரான

நாதமுனிகளைபபாாத்து அநுகாஹிககவேண்டும்)" எனறு ஆள வநதாரும "ராமாநுஜாாய சரணோஸமி குலபாதீப: த்வாவஸீத்ஸ யாமுநமுநே ஸசநாதவமஶய — வமஶய பராஙகுஶமுநே ஸச ஸோபி தேவயா தாஸஸதவேதி வாதாஸமி தவேக்ஷணீய" (அடியேன எமபெருமானாருடைய திருவடியை ஆஶரயிததவன பரபநநகுலவிளககான எமபெருமானாரும யமுனைததுறைவரான ஸ்ரீ ஆளவநதாருடைய திருவடி ஆகாநினறா ஸ்ரீ ஆளவநதாரும நாதமுனிகளின வமஶததில அவதரிததவா நாதமுனிகளும பராஙகுஶரான நமமாழவாரின திருவடியை ஆஶரயிததவா ஆழ வாரும தேவரீருடைய திவயமஹிஷியான பெரியபிராடடியாரின திருவடியை ஆஶரயிததவா தேவரீா ஆஶரயிததவா அபேக்ஷிதங களை அளிபபவா ஆதலின தேவரீருககு தாஸனெனறு கடாக்ஷிககத் தககுநதவன) எனறு ஆழவானும அருளிசசெயதிருககினறமையாலும "அநதோநநதகரஹணவஶகெ யாதி ரஙகேஶ யததவக - பஙகுர நௌகா குஹர நிஹிதோ நீயதே நாவிகேந: புஙகதே போகாந அவிதிதநருப ஸேவகஸயாபபகாதி -த்வத ஸமபராபதௌ பரபூவதி ததா தேஶிகோ மே தயாளு ॥ (கணணிலலாதவன கணணுடையான கையைபபறறிககொணடு எவவாறு செலகிறானோ? ஓடககாரனாலே மூடவன ஓடததில வைககபபடடவனாய எவவாறு அடைவிகக படுகிறானோ? அரசனை யறியாத ராஜபுருஷனுடைய ஆபபகாதிகள போகஙகளை எவவாறு அநுபவிககினறனவோ? அவவாறே உனனை அடைவிபபதில பரம தயாளுவான எனனுடைய ஆசாாயன சமாாத தனாகிறான) எனறு நம நிகமாநத மஹாதேசிகனும அருளிசசெய திருககினறமையாலும, பரமதயாளுவான ஆசாாயன இசசேதநனை முதலடியிலேயே மதீயன எனறு அபிமாநிதது பரிபூாணமான ஜஞாநபகதயாதி குணஙகளையுடையனாகையால பகவானுககு அத யநதம அபிமத பூதனாய "ஜஞாநீதவாதமைவமேமதம" (ஜஞாநீ எனககு ஆதமா) எனறு அவன வாயாலே சொலலுமபடியான பெருமை வாயநதவனாகையாலும ஆசாாயனுககு சேதந ஈஶவராக ளுடைய ஸமபநத முணடாகையாலும ஆசாாயனுககே புருஷகார யோகயதவம புஷகலமாகையால வரணீயனான ஸிததோபாயததிறகு விஶேஷணமான ஸ்ரீ ஶபதததால சொலலபபடட பெரியபிராடடி யாருககு ஶபதஸிததமான உபாயவிஶேஷணதவ மொழிய புருஷ

காரத்வம் கொள்கிற வித்தால் ஒரு ப்ரயோஜநமுமில்லையே என்று ஶங்கிக்கக்கூடும்.

இவ்விடத்தில் ஸ்வதஸ்வபாவத்தால் உபாயவிஶேஷணத்வமுண்டாயிருக்கச்செய்தேயும் விடவொண்ணாத ஸம்பந்தமான மாத்ருத்வப்ரயுக்த வாத்ஸல்யாதி குணத்ரயத்தாலும் தன்னுடைய பூர்வாபராத நிமித்தமாய ஈஶ்வரனுடைய குளிர்ந்ததிருவுள்ளத்தில் சீற்றமுண்டானால் அச்சீற்றத்தை ஆற்றுகைக்குறுப்பாய அவனுக்கு அபிமதமான ஸ்வரூப ரூப குண விபவாதி வைலக்ஷண்யத்தாலுண்டான வால்லப்யாதிஶயத்தாலும் பெரிய பிராட்டியாருடைய புருஷகாரமே கண்ணழிவற்ற புருஷகாரமாகும். மேலும் "ஆகிஞ்சந்யைகஶரணா கேசித்பாக்யாதிகா புந:। மத்பதாம்போருஹத்வந்த்வம் ப்ரபத்ய ப்ரீதமாநஸா:॥ லக்ஷ்மீம் புருஷகாரேண வ்ருதவந்தோ வராநநே (தன்னிடம் கைமுதலொன்றுமில்லாததொன்றையே புகலாகவுடைய சிலபாக்கியவான்கள் என்னுடைய சரணசரோஜங்களிரண்டையும், லக்ஷ்மியைப் புருஷகாரமாகக்கொண்டு உபாயமாகப்பற்றிக் கருத்தார்த்தர்களாகிறார்கள்) என்றும் மத்ப்ராப்திம் ப்ரதி ஜந்தூநாம் ஸம்ஸாரே பததாமத। லக்ஷ்மீ புருஷகாரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபி:॥ மமாபிசமதம் ஹ்யேதந் நாந்யதா லக்ஷணம் பவேத்। அஹம் மத்ப்ராப்த்யுபாயோவை ஸாக்ஷால் லக்ஷ்மீபதி ஸ்வயம்॥ லக்ஷ்மீ புருஷகாரேணவல்லபா ப்ராப்தியோகிநீ। ஏதஸ்யாஶ்ச விஶேஷோயம் நிகமாந்தேஷு ஶப்தயதே (ஸம்ஸாரத்தில் அழுந்தாநின்ற ஆத்மாக்கள் என்னைப் பெறுவதற்குப் பெரியபிராட்டியார் புருஷகாரமாக பரமருஷிகளால் சொல்லப்பட்டிருக்கிறாள் எனக்கு அபிமதமும் அதுவே வேறுவிதமானவழி கிடையாது என்னையடைவதற்கு உபாயம் லக்ஷ்மீபதியான நானே எனக்கு வல்லபையான பெரியபிராட்டியாரே அடைவிப்பதற்கு யோக்யமானவள் இவ்வர்த்தம் வேதாந்தங்களால் கோஷிக்கப்படுகிறது) என்று ஶாஸ்த்ரங்களிலும் ப்ரபத்த்யதிகாரியான சேதனன் பெரியபிராட்டியாரையே புருஷகாரமாகப்பற்றக்கடவன் என்று சொல்லியிருக்கின்றமையாலும் இவளையே புருஷகாரமாகப்பற்ற வடுக்கும்.

ஈஶ்வரன் புருஷோத்தமப்ரயுக்தமான நிரங்குஶ ஸ்வாதந்த்ரியத்தாலுண்டான கடினஸ்வபாவத்தால் நிருபாதிக ஸம்பந்த

முண்டாயிருக்கச்செய்தேயும் பிதாவைப்போலே நம்முடைய ஆஜ்ஞா ரூபமான ஶாஸ்த்ரங்களை அதிக்ரமித்து அபராதங்களைச்செய்யா நின்ற சேதநர்களைக்குறித்து ஒருக்கால் திருவுள்ளம் கலங்கி “தாமஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் க்ஷிபாம்யஜஸ்ரம் அஶுபாந் ஆஸுரீஷ்வேவ யோநிஷு” “ஆஸுரீம் யோநிமாபந்நா மூடா ஜந்மநி ஜந்மநி மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம்” என்று பாபயோநிகளில் தள்ளி நரகாதிகளை அனுபவிக்கும்படி செய்வேன் என்று தன் வாயாலே சொல்லுகையாலே மிகவும் பீதரான சேதநர்களைத் தானே அங்கீகரித்து தன்னுடைய வாத்ஸல்யாதிஶயத்தாலே ஸர்வேஶ்வரனை வஶீகரித்து அபராதங்களை க்ஷமிப்பித்து அங்கீகரிக்கும்படி பண்ணுகிறதும்

இவ்வளவாக புருஷகாரஸ்வரூபதாத்பர்யமும் அப்புருஷகாரத்தைச் செய்வதற்கு பெரியபிராட்டியாரே யோக்யமானவள் என்பதையும் அவள் சேதனன் விஷயத்திலும் பரமசேதனன் விஷயத்திலும் பண்ணும் புருஷகாரத்தின் படியையும் ஜீவேஶ்வரர்களிடத்தில் இவளுக்குண்டான ஸம்பந்தத்தையும் ஸர்வேஶ்வரன் இவள் விஷயத்தில் பண்ணும் ப்ரேமாதிஶயத்தையும் புருஷகாரத்திற்கு ஆவஶ்யகமான குணங்களையும் அக்குணங்களின் உபயோகத்தையும் ஸர்வேஶ்வரனுடைய க்ருபைக்கும் இவளுடைய க்ருபைக்குமுள்ள வாசியையும் இவளைப்புருஷகாரமாகப்பற்றுவிடில் நிரங்குஶ ஸ்வதந்த்ரனான ஸர்வேஶ்வரன் ரக்ஷிக்காமலிருப்பதுடன் ஶிக்ஷிக்கவும் கூடும் என்பதையும் ஆசார்யன் பண்ணும் புருஷகாரத்தைக் காட்டிலும் அவனுக்கும் பத்நியாய் வால்லப்யமுடையவளாய் அவனோடே நித்யவாஸம் பண்ணுமவளாயிருக்கும் இவள் புருஷகாரமே கண்ணழிவற்ற புருஷகாரமென்பதையும் சொல்லித்தலைக்கட்டியிருக்கிறது.

இவ்வர்த்தங்களையெல்லாம் நாம் சாஸ்த்ர முகத்தாலே அறியப் புகாப்போமாகில் சாஸ்த்ரங்களில் வைத்துக்கொண்டு “வேதாச் சாஸ்த்ரம் பரம் நாஸ்தி” என்று சொல்லப்படுகிற அபௌருஷேயமான வேதமும் “அநந்தா வை வேதா:” என்கிறபடி

அநந்தங்களாய் அதிலும் அர்த்தம் அறிபப்புகுமிடத்து அநேக ஶாஸ்த்ராபேக்ஷையுடையதாய் அல்ப அறிவுடையார்க்கு அறிய வரிதாய் மறையாயிருக்கும். ஸ்வயோக மஹிமையால் அவ்வேதார்த்தங்களை ஸாக்ஷாத்கரித்த பரம ருஷிகளால் அவ்வேதார்த்தப் ப்ரதிபாதகங்களாக அநுக்ரஹிக்கப்பட்ட ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களும் அவ்வோ அதிகாரிகளுக்கு அநுகுணமாகப் பல புருஷார்த்தங்களைப் பலவகைகளாகப் பேசுமவைகளாதலால் ஸாரா ஸார விவேகிகளுக்கல்லது அறிய வரிதாயிருக்கும்.

மேற்சொன்னவைகள் போலன்றிக்கே ஸம்ஸாரி சேதநர்களுடைய உஜ்ஜீவநார்த்தமாய் ஸர்வேச்வரன் தானே ஆசார்யனாய் நின்று ஸ்வஶிஷ்யனான நரனை வ்யாஜீகரித்து உபதேசித்த ஸகல வேதஸாரமான திருமந்த்ரமும் அஷ்டாக்ஷரமாய் 'அகாரத்திலே லக்ஷ்மீ ஸம்பந்தம் அநுஸந்தேயம்' என்றும், 'அவன் மார்பை விட்டுப்பிரியில் இவ்வக்ஷரம் விட்டுப் பிரிவது' என்றும் சில யுக்திகளைக் கொண்டு அறிய வேண்டும்படியா யிருக்கும். ஸமஸ்த ஶாஸ்த்ரதாத்பர்யபூதமான த்வயம் அவ்வாறின்றி அகாரத்தில் ஆர்த்தமாகக் கிடைத்த ஸ்ரீஸம்பந்தத்தைசாப்தமாகவும் நமச்சப்தத்தாலும் நாராயணப்பதத்தாலும் சொல்லப்பட்ட உபாயோபேயாம்சங்களை அழகாகஅறிவிக்குமதாய் அதிலும் அவ்வர்த்தநிஷ்டர்களுடைய அநுஷ்டாநரூபமாயிருக்கும் தொன்றாகையால், அநந்தங்களாய் மறைகளாயிருக்கும் வேதங்களைக் காட்டிலும் பல புருஷார்த்தங்களையும் பலவாறாகக் கலசிப் பேசும்படியான இதிஹாஸாதிகளைக் காட்டிலும் அதி சுருக்கமாய் அர்த்தங்களைக்கொண்டு ஊஹித்தறியவேண்டிய திருமந்த்ரத்தைக் காட்டிலும் இதராபேக்ஷையின்றியில் சேதநோஜ்ஜீவனத்திற்குறுப்பான ஸகலார்த்தங்களையும் சாப்தமாக நன்கறிவிக்கும். மேலும் ஸகல ஸாஸ்த்ரங்களும் சேதநனுடைய விஶிஷ்ட வேஷத்திலே நோக்காய் ஸதாநாநுஷ்டாநம் பண்ணயோக்கியமான தேகத்தாலேயே புருஷார்த்தஸித்தி என்னாநிற்கும். திருமந்த்ரம் சேதநனுடைய நிஷ்க்ருஷ்ட வேஷத்திலே நோக்காய் சேதநன்ஸ்வரக்ஷணத்தில் நின்றும் கைவாங்கினலொழிய அகாரவாச்யனை ஸர்வேச்வரனுடைய ரக்ஷகத்வம் ஜீவியாதாகையால் அவனுடைய ரக்ஷண ப்ரவ்ருத்திக்கு விரோதியான ஸ்வப்ரவ்ருத்தியை விட்டிருக்கும் ஆத்மாவாலே பேறென்று சொல்லாநிற்கும்.

(தொடரும்)

ஶ்ரீரஸ்து

ஶ்ரிய:பதயே நம:

ஶ்ரீமதே ராமாநுஜாய நம:

தஸ்மை ராமாநுஜார்யாய நம: பரமயோகினே ।
ய: ஶ்ருதிஸ்ம்ருதிஸூத்ராணாம் அந்தர்ஜ்வரமஶீஶமத் ॥

தஸமை ராமாநுஜாாயாய நம பரமயோகிநே |
யஃஶ்ருதிஸ்ம்ருதிஸூதராணாம அநதாஜவரமஸீஸமத ||

வேதவேதாந்த வேதாங்க ஸத்தர்க்கத்யாத்தவாஹினீ ।
ஶ்ரீராமாநுஜஸித்தாந்த வைஜயந்தீ விஜ்ரும்பதாம் ॥

வேத வேதாநத வேதாஙக ஸதகுருகதயாததவாஹிணீ |
ஸ்ரீராமாநுஜஸிததாநத வைஜயநதீ விஜருமபதாம ||

ஸ்ரீ

# ராமாநுஜ ஸித்தாந்த வைஜயந்தீ

மாதநதோறும வெளிவரும ஸதஸமபரதாயாாதத
பாகாமய பதரிகை

பதராதிபா

வடகரை இராமாநுஜாசாரியாா

தொகுதி 1.] [பகுதி 4.

## பதராதிபரின் விஜ்ஞாபனம.

மாசிப புனாபூசம

ஸ்ரீ ராமாநுஜ ஸிததாநத வைஜயநதீயின நானகாவது பகுதி மாசிப புனாபூசததில அவதரிகக நோநததுபறறி அமமாசி புனாபூசததினபெருமை இஙகு யதோசிதம தெரிவிககபபடுகிறது 'மாசிப புனாபூசததிறகுபபெருமை என'? எனில, ஆழவாாகளில ராஜாவாகிய நம குலசேகரன அவதரிககும பாககியம பெறறதே இவவாறு இபபுனாபூசததிலவதரிதத ஆழவாா ஸமருதி விஷயமானவாறே அவவாழவாரின பெருமையைப பேசாமலிருகக முடியுமோ? இவவாழவாா கவி

யுகம் பிறந்து இருபத்தெட்டு சென்ற பராபவ வருஷம் மாசிமாதத்தில் புனர்பூச நக்ஷத்திரத்தில் சுக்ல பக்ஷத்வாதசியுடன் கூடிய வியாழக் கிழமையில் கௌஸ்துபாம்சராய் சேரன் குலத்திற்கு சேகரராய் நம்மை உஜ்ஜீவிப்பதற்கு திருவவதரித்தருளினார். இவ்வர்த் தத்தை ... மாலையில்:

கல்யப்தே ஸக ஸங்க்யயா வ்யபகதே மாஸேச மாகாபிதே
வர்ஷேசாபி பராபவே ஸுரகுரோர்வாரேசபக்ஷே ஸுசௌ
த்வாதஸ்யாக்யதிதௌ புநர்வஸுதிநே ப்ரீத்யாக்யயோகாந்விதே
த்ராதும் ந: குலசேகர: க்ஷிதிபதி: ஸ்ரீ கௌஸ்து பாத்மாऽபவத் ||

என்கிற ஸ்லோகம் தெரிவியாநிற்கும். இவ்வாழ்வார் சக்ரவர்த் தித் திருமகனைப் பெருமாளைப் போலவே க்ஷத்ரிய வம்சத் திலே அவதரித்துப் பெரியது சிறியதை நலியாதபடி செங்கோல் செலுத்தி பரமோதாரராய் வெழுந்தருளியிருந்தபடியால் குலசேகரப் பெருமாள் என்றும் போற்றப்படுவர். இவ்வாழ்வார் எம்பெருமா னால் மயர்வற மதிநல மருளப்பெற்று எம்பெருமானுடைய ஸ்வரூப குண விபவாதிகளை ஸாக்ஷாத்கரித்து வேதவேத்யனை ஸர்வேச் வரன் சக்ரவர்த்திக்குப் புத்ரனாய் அவதரித்தாற்போல் வேதமும் வால்மீகி முகத்தில் நின்றும் ராமாயணமாக அவதரித்திருக்கின்றமை யாலும் "கற்பார்ராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ" என்றும், "மனத்துக்கினியான்" என்றும் சொல்லப்படுகிற ஸ்ரீ ராம வ்ருத்தாந் தத்தைக் கேட்டுப் போராநிற்க - "சதுர்தஸ ஸஹஸ்ராணி ரக்ஷஸாம் பீம கர்மணாம் | ஏகஸ்ச ராமோ தர்மாத்மா கதம் யுத்தம் பவிஷ்யதி" என்கிற ஸ்லோகத்திற்கு இளைய பெருமாளைப் பிராட்டிக்குத் திரு மேனிக் காவலாக வைத்துவிட்டு தர்மாத்மாவான பெருமாள் தான் ஒருவராய் அதிபயங்கரமான க்ருத்யங்களைச் செய்யும் ராக்ஷஸர்களாய் அதிலும் பதினாலாயிரம் பேரான கரதூஷணாதிகளோடு யுத்தத் திற்கு எழுந்தருளினார் அங்கு எவ்வாறு முடியுமோ? என்று ருஷி வருந்துகிறான் என்று அர்த்தம் சொல்லக்கேட்டவாறே பெருமாளிட முள்ள ப்ரேமாதிசயத்தாலே கலங்கி, வாளும் வில்லுங்கொண்டு பின்செல்வாரில்லாத குறை தீர்க்கத் தான் சதுரங்கபலத்தோடு புறப் பட்டு எழுந்தருளா நிற்க, இவருடைய கலக்கத்தைத் தவிர்ப்பிக்க மந்த்ரிகள் சில வைஷ்ணவோத்தமர்களை எதிரே வரவிடுத்து அவர் களின் வாயிலாய், "தம் த்ருஷ்ட்வா" என்கிற ஸ்லோகத்தை வ்யாக்யா நிக்கும்படிசெய்ய அவர்களும் "பதினாலாயிரம் ராக்ஷஸர்களையும் தான்

ஒருவனுக்கே ரக்ஷித்து ஆச்ரமம் எழுந்தருளா நின்ற பெருமாளின் வீரத்திறக்கண்டு ஜனககுல ஸுந்தரியான பிராட்டி பர்த்தாவான பெருமாளை ஆலிங்கனம் பண்ணி ஆச்வஸிப்பித்தாள்" என்று சொல்லக்கேட்டு, ஆழ்வாரும் அதிஸந்துஷ்டராய் மீண்டு எழுந்தருளினார். அப்பால் மந்த்ரிகள் இவர்க்கு இவ்வைஷ்ணவ ஸஹவாஸத்தாலன்றோ இவ்வாறு கலங்கும்படி ஏற்படுகிறது என்று கருதி இவர்க்கு ஸஹவாஸத்தை ஒழிக்க உபாயம் தேடி திருவாராதனப் பெருமாளின் ஆரத்தை எடுத்து மறைத்து வைத்து வைஷ்ணவர்கள் அபஹரித்தார்கள் என்று சொல்ல பரஞான பரமபுருஷனிடத்தில் பக்திபண்ணும் பரமபாகவதோத்தமர்கள் பர (அந்யர்களின்) வஸ்துவை ஆசைப்படார்கள் என்று ப்ரதிஜ்ஞை பண்ணி பாம்புக்குடத்திலே கையிடுவேன் என்றுசொல்ல, மந்த்ரிகளும் இவருடைய அத்யவஸாயத்தைப் புகழ்ந்து தாங்கள் செய்த அக்ருத்யத்தை விண்ணப்பம் செய்து ஆரத்தை ஆழ்வாரிடம் ஸமர்ப்பித்தார்கள் அப்பால் ஆழ்வாரும் இதரர்களுடன் இவ்வரசாளும் பெருமையை வெறுத்து நல்லார்கள் வாழும் நளிரரங்கமாகிற திருவரங்கம் திருப்பதி சென்று திருக்காவேரி திரைக்கையால் அடிவருடத் திருவனந்தாழ்வான்மேலே திருப்பள்ளிகொண்ட திருமேனியழகைக் கண்ணாரக்கண்டு வாயாரப் புகழ்ந்து அநுபவித்து அவ்வநுபவ பரீவாஹ ரூபமாகப் பெருமாள் திருமொழி என்கிற திவ்யப்ரபந்தத்தை அருளிச்செய்து இவ்வுலகை வாழ்வித்தருளினார் இவ்வாறு இவ்வாழ்வாரின் பெருமையை நாம் அநுபவிக்கும்படி செய்த இந்த மாசிப்புனர்பூசத்தின்று வைஜயந்தியின் நான்காவது பகுதி வெளிவந்ததும் ஒரு ஸௌபாக்யமே

---

## ஸ்ரீ ராமாநுஜ ஸித்தாந்தம்

கீழ்ஸஞ்சிகையில் ப்ரமாணங்களைப்பற்றி யதோசிதம் தெரிவிக்கப்பட்டிருக்கிறது இப்போது அப்ரமாணங்களால் அறியக்கூடிய ப்ரமேயங்கள் இவைகள் என்பது நிரூபிக்கப்படுகிறது

ப்ரமேயங்கள் என்றால் ப்ரமாணங்களால் அறியத் தகுந்தவைகள் அவைகள் ஸ்வஸ்வரூபம், பரஸ்வரூபம், புருஷார்த்தஸ்வரூபம், உபாயஸ்வரூபம், விரோதிஸ்வரூபம் என்று சொல்லப்படுகிற அர்த்த பஞ்சகங்கள்

அவைகளில், ஸ்வஸ்வரூபமாவது ஆத்மஸ்வரூபம் எனப்படும் ஆத்மஸ்வரூபமாவது தேக இந்த்ரியமந: ப்ராண புத்திகளைக்காட்

டிலும் வேறுபட்டதாய நித்யமாய நிர்விகாரமாய ஜ்ஞாநத்திற்கு ஆஸ்ரயமாய ஜ்ஞாநமாய அணுவாய ஈஸ்வரனுக்கு சேஷமாய் பரதந்த்ரமாயிருக்கும்

தேஹாதிகளைக் காட்டில் ஆத்மா வேறுபட்டது என்று சொல்வது எப்படி ? எனில், காணப்படுகிற தேஹம், என்னுடைய தேஹம் என்று சொல்லப்படு கின்றமையாலும் ஆத்மா நான் என்று தோற்றுகையாலும் இந்த தேஹமானது ஜாகரத்தசையில் (விழித்துக்கொண்டிருக்கும்பொழுது) நான் பருத்தவன் சிறுத்தவன் என்று ஆத்மாவாகத் தோற்றினாலும் ஸுஷுப்தி தசையில் (உறங்கும்பொழுது) அவ்வாறு தோற்றக் காணாமையாலும் ஆத்மா உறங்குவதற்குமுன் எல்லாவற்றையும் அறிந்திருந்து உறங்கும் பொழுது என்னுடம்பைக் கூட நான் அறிந்திலேன் என்று உறங்கி எழுந்தபொழுது சொல்லக் காணுகையாலும், ஸுஷுப்தி தசையோடு ஜாகரத்தசையோடு வாசியற எப்பொழுதும் தோற்றுகையாலும் ஆத்மா தேகத்தைக் காட்டிலும் வேறுபட்டவன் மேலும் இந்த தேஹம் செவி, வாய், கண், மூக்கு, உடல் முதலான அநேக அவயவங்களின் ஸங்கா(கா) தம (சேர்க்கை) ஆகையாலும் அஹம் (நான்) என்கிற வ்யவஹாரா ஹனான ஆத்மா ஒருவனாகத் தோற்றுகையாலும் தேஹத்தைக் காட்டிலும் வேறுபட்டவன் இன்னமும், " நான் முன்பு கண்ணும் செவியுமுள்ளவனாயிருந்தேன் இப்போது குருடனும் செவிடனும் ஆனேன் முன்பு என் மனது நன்றாயிருந்தது ஆதலால் எதையும் நன்றாயறியுமவனுமிருந்தேன் இப்போது அது அவ்வளவு ஸரியாயில்லாமையால் நான் ஒன்றும் அறிந்துகொள்ள முடியாதவனாயிருக்கிறேன் முன்பு ஜ்ஞாநமுடையவனாயிருந்தேன் இப்போது ஜ்ஞாநமில்லாதவனாய் விட்டேன் என்று வ்யவஹரிக்கக் காண்கின்றமையாலும், ஆத்மா தேஹத்தைக் காட்டிலும் வேறுபட்டவன் இவ்வாறு ப்ரத்யக்ஷத்தாலும் அநுமானத்தாலும் ஆத்மா தேஹத்தைக் காட்டிலும் வேறுபட்டவன் என்று தோற்றக் கடவதாயிருக்கும் மேலும் "பஞ்ச விம்ஸோயம் புருஷ:" "பஞ்ச விம்ஸ ஆத்மாபவதி" ய: பர: ப்ரக்ருதே: ப்ரோக்த: புருஷ: பஞ்ச விம்ஸக:| ஸஏவ ஸர்வ பூதாத்மா நரஇத்ய பிதீயதே || என்று ஆத்மா இருபத்தைந்தாவது தத்வமென்றும் அவனே புருஷன் என்று சொல்லப்படுகிறான், என்றும் ஸப்த ப்ரமாணங்களாகிற ஸ்ருதிஸ்ம்ருதிகளாலும் ஆத்மா தேஹாதிகளைக் காட்டிலும் வேறுபட்டவன் என்று சொல்லப்படுகிறது

நித்யமாவது ஸர்வகாலத்திலும் உண்டாயிருக்கை. இவ்விடத்தில் ஆத்மா நித்யனானால் பிறந்தான், இறந்தான் என்று சொல்லுவானேன்? எனில், தேஹ ஸம்பந்தத்தைப் பெற்றபொழுது பிறந்தான் என்றும் தேஹவியோகத்தை அடைந்தபொழுது இறந்தான் என்றும் வ்யவஹரிக்கின்றார்களே அல்லாமல் ஆத்மா பிறந்தான், இறந்தான் என்று அர்த்தமில்லை இவ்வர்த்தத்தை "ஜாயதே ம்ரியதே வா விபஶ்சித" "ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜா வீஶநீஶௌ" "நித்யோ நித்யாநாம்" என்று ஶ்ருதியும், "பருக்ருதிம் புருஷஞ் சைவ வித்யா நாதீ உபாவபி" "நஜாயதே ம்ரியதேவா கதாசித" என்று கீதையிலும் மற்றும் அநேக ஸ்தலங்களிலும் சொல்லப்படுகையால் ஆத்மா நித்யன் என்று சொல்லப்படுகிறான் நிர்விகாரன் என்பது அசித்துப்போல் விகாரப் படாமல் எப்போதும் ஒரு படிப்பட்டிருக்கை இவ்வர்த்தத்தை "அம்ருதாக்ஷரம்ஹர:" என்றும் "ஆத்மா ஶப்தத்தோக்ஷர:" என்றும் சொல்லப்படுகிற ஶ்ருதி வாக்யங்கள் அறிவிக்கிறது

ஜ்ஞாநத்திற்கு ஆஶ்ரயமாயிருக்கையாவது, விளக்கும், விளக்கின் வெளிச்சமும் தேஜஸ்ஸாயிருந்தாலும் விளக்கு வெளிச்சத்திற்கு ஆஶ்ரயமாயிருக்குமாப் போலே ஆத்மா ஜ்ஞாநமாயிருக்கச் செய்தேயும் ஜ்ஞாநத்திற்கு இருப்பிடமாயுமிருக்கும். இவ்விடத்தில் ஆத்மா, ஜ்ஞாநத்திற்கு ஆஶ்ரயமாகில் ஶாஸ்த்ரங்களில் இவ்வாத்மாவை "விஜ்ஞாநமய:" என்றும், "விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே" என்றும், ஜ்ஞாநமென்றும் சொல்லுவானேன்? என்று சங்கிக்கக்கூடும் இவ்வாத்மாவிற்கு ஜ்ஞாநம், ப்ரதாந குணமாய் ஸ்வஸ்வரூபத்திற்கு நிரூபக தர்மமா யிருக்கையாலும் ஆத்மாவை ஜ்ஞாநம் என்றும் சொல்லக் குறையில்லை இவ்வர்த்தத்தை "தத்குண ஸாரத்வாத்தத் வ்யபதேஶ:" என்கிற ஸூத்ரம் தெரிவிக்கிறது

அணுவாயிருக்கையாவது ஹ்ருதயத்திலிருக்கையும், அதில் நின்றும் வெளியேறிச் செல்லுதலையும் மறுபடியும் வருகையையும் சொல்லுகையாலே அணுவாகக் கடவன் விபுவானால் இவ்வாறு செல்லக்கூடாதிறே இவ்வர்த்தத்தை "ஏஷோணுராத்மா சேதஸா வேதிதவ்ய:" முதலான ஶ்ருதிகள் அறிவிக்கிறது

இவ்வாத்மா ஈஶ்வரனுக்கு சேஷமாயிருக்கும் கீழ்ச்சொன்ன ஸ்வரூபங்களைக் காட்டிலும் சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம் என்பது ஸ்ரீ ராமாநுஜ ஸித்தாந்தம். இந்த சேஷத்வ விவரணம் அடுத்த ஸஞ்சிகையில் வெளிவரும்

---

# ப்ரஹ்ம ஸூத்ரமும்—ராமாநுஜ ஸித்தாந்தமும்

[பெருமாள் கோயில்
ப்ரதிவாதி பயங்கரம் ஸ்ரீ உ வே அண்ணங்கராசாரியார் ]

உபநிஷத்துக்களின் ஒரு மிடற்றான தாற்பரியத்தை நிர்ணயம் செய்வதற்கு ப்ரவர்த்தித்தவர் வ்யாஸ மஹர்ஷி இவர் இயற்றியது சாரீரக மீமாம்ஸை இதுவே ப்ரஹ்மஸூத்ர மெனப்படும் அதற்குப் பல பாஷ்யங்கள் அவதரித்திருந்தாலும் நம் இராமாநுசமுனி அருளிச் செய்த ஸ்ரீ பாஷ்யமே ஸூத்ரகாரருடைய ஹ்ருதயத்தை நன்கு அநுஸரித்தது என்பது ப்ராமாணிகர்களின் கொள்கை

அந்த ப்ரஹ்மஸூத்ரத்தில் முதல் அத்யாயத்தில் நான்காவது பாதத்தில் ஆறாவது அதிகரணம் வாக்யாந்வயாதிகரண மெனப்படும் இதன் ப்ரமேயத்தை ஆராய்ந்து பார்த்தால் ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்தத்தின் ஆர்ஜவம் விளங்கும்

ப்ருஹதாரண்யகமென்னும் உபநிஷத்தில் மைத்ரேயீ ப்ராஹ்மணம் என்னும் பகுதியில் (6—5—6) "ந வா அரே பத்யு: காமாய பதி: ப்ரியோ பவதி ஆத்மநஸ்து காமாய பதி: ப்ரியோ பவதி" (நவா அரே பத்யு காமாய பதி ப்ரியோபவதி ஆத்மநஸ்து காமாய பதி ப்ரியோ பவதி) என்று தொடங்கி, "ந வா அரே ஸர்வஸ்ய காமாய ஸர்வம் ப்ரியம் பவதி ஆத்மநஸ்து காமாய ஸர்வம் ப்ரியம் பவதி ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய: ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய: " (நவா அரே ஸர்வஸ்ய காமாய ஸர்வம் ப்ரியம் பவதி ஆத்மநஸ்து காமாய ஸர்வம் ப்ரியம் பவதி ஆத்மாவா அரே த்ரஷ்டவ்ய ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய) என்று ஓதப்பட்டிருக்கின்றது மோக்ஷோபாயம் எது? என்று கேட்கிற மைத்ரேயியை நோக்கி யாஜ்ஞவல்க்யர் ஆத்மோபாஸநத்தை மோக்ஷோபாயமாக உபதேசிக்கிறாரிங்கு இதில் உபாஸ்ய வஸ்துவாகச் சொல்லப்பட்டிருக்கிற ஆத்மா ஜீவாத்மாவா? பரமாத்மாவா? என்கிற ஸம்சயத்தைப் போக்குவதற்காக இந்த வாக்யாந்வயாதிகரணம் ப்ரவர்த்தித்திருக்கின்றது

மேலே காட்டியுள்ள மைத்ரேயீ ப்ராஹ்மண ப்ரகரணத்தில் உள்ள கீழ் மேல் வாக்கியங்களெல்லாம் பரமாத்ம விஷயமாகவே

அநவயிககக கூடியவையாயிருபபதால-ஜீவாதம விஷயமாகச சிறிதும அநவயிககமாட்டாமையால இஙகுள்ள ஆதமா எனகிற பதம பரமாத மாவைக காட்டுமேயலலது ஜீவாதமாவைக காட்டமாட்டாது எனப தாக ஸித்தாநதம செயகிறது [வாக்யாந்வயாத்] வாகயாநவயாத என னும ஸூத்ரம.

இநத அதிகரணததில இதறகுமேல மூனறு ஸூத்ரஙகள இருக கினறன அவை எதறகாக வநதவையெனனில, மேறகுறிதத மைத் ரேயீ ப்ராஹ்மணததில பரமாதமோபாஸநமே விவக்ஷிதமாகில ஜீவாதமவாசியான ஆதமா எனகிற சொலலாலே பரமாதமாவைச சொலலியிருபபானேன? எனகிற கேளவிககு விடையளிபபாக அநத மூனறு ஸூத்ரஙகள வநதன "ப்ரதிஜ்ஞாஸித்தேர்லிங்கம் ஆச்மரத்ய:" (பரதிஜஞா ஸித்தோ லிஙக மாச்மரதய) "உத்க்ரமிஷ்யத ஏவம் பாவாதித்யௌடுலோமி:" (உதகரமிஷயத ஏவம பாவாதித யௌடுலோமி) எனகிற இரணடு ஸூத்ரஙகள கடநத பிறகு உளள "அவஸ்திதேரிதி காசக்ருத்ஸ்ந:" (அவஸதிதேரிதி காசகருதஸந.) என் கிற மூனறாவது ஸூத்ரததை இபபோது எடுததுக கொள்வோம். இதனால என்ன சொல்லபபடுகினறதெனறால, ஆதமா என்கிற சப தததினால பரமாதமாவைச சொலலுவது பொருநதும, அது ஜீவாதம வாசக சபதமாகவேயிருநதாலும ஜீவாதமாவினுள்ளே பரமாதமா உயி ராக இருக்கினறாரெனபது "ய ஆத்மனி திஷ்டந் ஆத்மநோந்தரோ யமாத்மா ந வேத யஸ்யாத்மா சரீரம் ய ஆத்மாநமந்தரோ யமயதி ஸ த ஆத்மாந்தர்யாம்யம்ருத:" (ய ஆதமநி திஷடந ஆதமனோநதரோ யமாதமா நவேத யஸயாதமா சரீரம ய ஆதமாநமநதரோயமயதி ஸதஆதமா அநதாயாமயமருத) இதயாதிகளான உபநிஷத வாகயங களினாலே ஸிததமாதலால, தனககு சரீரமான ஜீவாதமாவில ஆதமா வாகப பரமாதமா இருபபதனால ஜீவசபதததாலே பரஹமததை பரதி பாதகம பணணினபடி எனறு காசகருதஸநா எனபவா அபிபராயப படுவதாக இநத ஸூத்ரததினால சொலலபபடுகிறது

சரீராதமபாவததைக கொணடு அபேதசருதி நிர்வாஹம செய யததககது எனபதே இநத ஸூத்ரததினால தேறியதாகும ஸ்ரீ பாஷ யததிலும வேதாநத ஸாரததிலும வேதாநத தீபததிலும இநத ஸூத்ரததை விவரிககுமிடததில எமபெருமானார இவவாததமே ஸூத்ரகாராககு அபிமதம எனபதை நிரூபிததருளியிருககிறார

இநத ஸூதரததிறகுக கீழ இரணடு ஸூதரஙகளால கூறப படடுளள விஷயம இநத ஸூதரததின ஆததததோடு இணஙக மாடடாமையாலும வஸது த்ருஷடமாகையாலும இதறகுமேல வேறொரு அபிபராயததைக காடடாமல இவவளவோடு நிறுததி விடடபடியாலும இதுவே வயாஸருககு அபிமதம எனறு அருளிச செயயபபடடிருககிறது

இநத ஸூதரததிறகு பாஷயமிடாநினற ஸ்ரீ சஙகராசாரய ஸவாமிகளும "காஶக்ருத்ஸ்நீயம் மதம் ஶ்ருத்யநுஸாரீதி கம்யதே" (காஸகருதஸநீயம மதம ஸருதயநு ஸாரீ இதி கமயதே) எனறு எழுதியுளளார ஆனால அவா பரகருத ஸூதரததின ஆததததை வேறு வகையாக உரைததிருககினறார "அவஸ்திதே:" (அவஸதிதே) என்று ஸூதரததிலுளள பதததிறகு 'இருபபதனாலே' எனறு பொருள எஙகே எது எவவிதமாக இருபபதனாலே? எனறு கேளவி பிறககும ஜீவாதமாவினிடததில பரமாதமா உயிராக இருபபதனாலே எனறு சொலலவேணடும இஙஙனமே நமமுடைய பாஷயகாரா அருளிச செயதார

சஙகராசாரய ஸவாமிகளோவெனனில, "அஸ்யைவ பரமாத்மநோऽநேநாபி விஜ்ஞாநாத்மபாவேநாவஸ்தாநாத் உபபந்நமிதமபேதேநோபக்ரமணமிதி காஶக்ருத்ஸ்ந ஆசார்யோ மந்யதே" (அஸயைவ பரமாதமந அநேநாபி விஜஞாநாதமபாவேந அவஸதாநாத உபபநநமிதம அபேதேந உபகரமணமிதி காஸகருதஸந ஆசாரயோ மநயதே) எனறு தமது பாஷயததில எழுதியுளளார. 'பரமாதமாவே ஜீவாதமாவாக இருபபதனாலே' எனபது இவருடைய ஆததமாகத தேறுகிறது ஸூதரகாரா இவவாததததை விவக்ஷித திருககமாடடாரெனபது "அவஸ்திதே:" (அவஸதிதே) எனகிற பதத தின ஸவாரஸயததை உணாநதவாகடகு எளிதாகத தெரியும அதைப பறறிப பிறகு விரிவாகப பேசுவோம இரணடாவது அதயாயததில மூனறாவது பாதததிலுளள "சராசரவ்யபாஶ்ரயஸ்து ஸ்யாத் தத்வ்யபதேஶோ பாக்தஸ்தத்பாவபாவித்வாத்" (சராசரவயபாஸரயஸது ஸயாததததவயபதேஸோ பாகஸததபாவ பாவிதவாத) எனகிற ஸூதரததாலும ஶரீராத்மஸ்வரூப (சரீரவாசிஸபத) ஙகளுககு ஸரீரிபாயந ததவம நிரணயிககபபடுவதால இதனை உபஜீவிததே "ஸ ஏஷ

நிர்தேஶ்யம் (அபேதநிர்தேசம்) ஆகாரங்குச் செய்யப்படுவதாகக் கொள்வது மிகவும் பொருந்துகின்றது.

இவ்விஷயத்தை நமது நெஞ்சில் திடமாகத் தேக்கிக் கொள்ளுமாறு ஸ்ரீரங்கராஜஸ்தவ-உத்தரசதகத்தில் பட்டர் இரண்டு ச்லோகங்களை அருளிச்செய்துள்ளார் “தேஹோதேஹீதி காரணே விக்ருதய:” (தேஹோ தேஹீதி காரணே விக்ருதய) என்பதும் “ஸ்தித்யுத்பத்தி ப்ரவ்ருத்தி” (ஸதித்யுத்பத்தி ப்ரவ்ருத்தி) என்பதும் அவை. அந்த இரண்டு ச்லோகங்களின் பொருளை நன்கு உணரப்பெற்றால் ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்த ஸாரத்தை நாம் உணர்ந்தோமாவோம். அடுத்த ஸஞ்சிகையில் அதனை விவரிப்போம்.

நம்முடைய ஸித்தாந்தத்தில் நாம் முக்கியமாகத் தெரிந்து கொள்ளவேண்டிய விஷயம் ஸகல சேதநாசேதநங்களும் ஸர்வேச்வரனுக்கு சரீரம்; அவன் சரீரி என்பதேயாம். இதுவே சரீராத்மபாவம் என்னப்படும். இது ஸகல வேதாந்தப் பெட்டிகளுக்கும் ஒரு திறவுகோல்போன்றது. இதை வைத்துக்கொண்டு எந்த உபநிஷத் வாக்யத்தையும் திறந்து நாம் ஸ்ராவ்ய(பாத)மாக அநுபவிக்கலாம். இதற்கு ப்ரதாந ப்ரதி தந்த்ரம் என்று வ்யவஹாரம். நம்முடைய ஸித்தாந்தத்திற்கு அந்தரங்கமாகவுள்ள ஆத்மவிசேஷங்களுள் இந்த சரீராத்ம பாவமே முதன்மைபெற்றதென்றும், இதைச் செவ்வனே தெரிந்து கொண்டால் ஒரு ப்ரதிபக்ஷியும் நம் எதிரே நின்று ஒரு கோலாகலமும் செய்யமுடியாதென்றும் ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்கிறார்.- “யச்சித்தம் யதிஸார்வபௌமகதிதம் வித்யாதவித்யாதத: ப்ரத்யூஷம் ப்ரதிதந்த்ரமந்த்ரமுகை: க்லுப்திவிக்லுப்தை: | தச்சேத்க்ருத்ய ஜடித்யுபைதி விலயம் தத்தந்மதஸ்தாபநா ஹேவாக ப்ரதமாநஹேதுகதா கல்லோல கோலாஹல: ||” (யச்சித்தம் யதிஸார்வபௌமகதிதம் வித்யாதவித்யாதம். ப்ரத்யூஷம் ப்ரதிதந்த்ர மந்த்ரமுகே க்லுப்த விக்லுப்ததம:—தச்சைகதா ஜடிதுபைதி விலயம் தத்தந்மதஸ்தாபநா ஹேவாக ப்ரதமாநஹேதுக கதா கல்லோல கோலாஹல.—என்பது ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் தேசிகனுடைய திவ்ய ஸூக்தி. எம்பெருமானாருளிச்செய்த சரீர சரீரபாவமாகிற இந்த ப்ரதாநப்ரதி தந்த்ரமானது அவித்யையாகிற இருளைத் தொலைக்க வல்லது. இதனை நன்றாக ஒருவன் தெரிந்து கொள்வானாயின் அவனே மஹாபண்டிதன், அப்படிப்பட்ட ஒருவனை

5

இருந்தாலும் போதும்; எத்தனை வாதிகள் கூடி எவ்வளவு குதர்க்க கோலாஹலங்கள் செய்தாலும் அவற்றையெல்லாம் ஒரு நொடிப் பொழுதில் அவலீலையாக ஒழித்திட அவ்வொரு வ்யக்தியே போதும் என்று இதனால் பரம கம்பீரமாக அருளிச் செய்தாராயிற்று.

---

## நவவித ஸம்பந்த விவரணம்

[பெருமாள் கோயில்
ப்ரதிவாதி பயங்கரம் ஸ்ரீ உ. வே. அண்ணங்கராசாரியார்]

எம்பெருமானோடு நமக்குள்ள உறவைத் தெரிந்துகொள்வதே சிறந்த தவமென்றும், அந்த உறவு ஒன்பது வகையாகத் திருவெட்டெழுத்தெனும் திருமந்திரத்தில் தேறுகின்றதென்றும் முன்னம் நிரூபித்தோம். அவ்வுறவுகளை ஒவ்வொன்றாக எடுத்துக்கொண்டு ஆராய்ச்சி செய்யப் புகுவோமினி.

திருமந்திரத்தில் முதலெழுத்தாகிய அகாரத்தில் ப்ரக்ருதி சக்தியினால் எம்பெருமானே ஸகல ஜகத்காரணபூதன் என்று விளங்குகின்றதென்று நிரூபித்திருக்கிறோம். அவன் காரணபூதனானால் உலகமெல்லாம் அவனுடைய காரியப்பொருள் என்பது சொல்லாமலே விளங்குகின்றது. அவன் பிதாவாய் நாமெல்லாரும் அவனுடைய மக்கள் ஸ்தானத்திலே யிருக்கின்றோமென்றவாறு.

எம்பெருமான் விபவாவதாரங்களில் தன்னுடைய பித்ருத்வத்தை மறைத்துக்கொண்டு தசரத புத்திரன் வஸுதேவ புத்திரன் என்றாற்போலே சிலர்க்குப் புத்திரனாயிருக்குந் தன்மையை ஏறிட்டுக் கொண்டாலும் அவனுக்குக் காரணத்வம் பறியுண்டு கார்யத்வம் வந்துவிடாது. தன்னுடைய க்ருபாதிசயத்தினால் பிறக்கிறானேயல்லது நம்மைப்போலே கருமத்தினால் பிறக்கிறானல்லன். இதை "ஃஜாயமாநொ ஃஹுயா விஜாயதெ | தஸ்ய யொநிம் பரிஜாநந்தி யொநிம்" (அஜாயமாநோ பஹுதா விஜாயதே தஸ்யதீரா: பரிஜாநந்தியோநிம்) என்றும் "பிதா புத்ரெண பிதுமாந் யொநியொநௌ நாவெஃவிந்மநுதெ தம் ப்ருஹந்தம்" (பிதாபுத்ரேண பித்ருமாந் யோநியோநௌ நாவேதவிந் மநுதே தம் ப்ருஹந்தம்) என்றும் வேதபுருஷன் ஓதுகின்றான். நாம் பலயோனிகளிலும் பிறப்பது போலவே அவனும் பலபல யோனிகளில் பிறப்பதாகக் கேள்விப்படுகிறோம். கீதையில் தானே அருளிச் செய்கிறான் "ஃஹுநி

ணி வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந" (பஹூநிமேவ்யதீதாநி ஜந்மாநிதவசார்ஜுந) என்று. நம்மைக் காட்டிலும் அதிகமாகவே அவன் பிறக்கிறான் என்றும் சொல்லலாம். ஆனாலும் நம்முடைய பிறப்புக்குக் கருமம் காரணமாயிருப்பதுபோல் வல்லாமல் கேவலக் கருணையே அவனுடைய அவதாரங்களுக்குக் காரணமாயிருக்கின்றமையால் பிறக்கப் பிறக்க அவனுக்குத் தேசு பொலிகின்றது. இதை "ஸ உ ஶ்ரேயாந் பவதி ஜாயமாந:" (ஸ உ ஶ்ரேயாந் பவதி ஜாயமாந:) என்றும் "பலபிறப்பா யொளிவரும்" என்றும் உபய வேதங்களும் அறைந்தன. மகனொருவர்க்கல்லாத மாமேனி மாயனை அவனுடைய அவதார சீர்மைகளை மற்றொருகால் அநுபவிப்போம். இப்போது அவனது காரணத்வப் பெருமையைப்பற்றிப் பேசுவோம்.

பரப்ரஹ்மத்தைப்பற்றிப் பேசத் தொடங்கிய உபநிஷத்து முகத்திலேயே "யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே தத்ப்ரஹ்ம" (யதோவா இமாநி பூதாநி ஜாயந்தே தத்ப்ரஹ்ம) என்று ஜகத் காரணத்வத்தையே ஓதிற்று. "அதாதோ ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா" (அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா) என்று ப்ரஹ்மவிசாரம் செய்யப்புகுந்த வ்யாஸரும் அடுத்த ஸூத்ரத்திலே "ஜந்மாத்யஸ்ய யத:" (ஜந்மாத்யஸ்ய யத: ) என்று சொல்லி ஜகத் காரணத்வத்தையே ப்ரஹ்மலக்ஷணமாகப் பேசினார். பரப்ரஹ்மமாகத் தம்மை அநுசரிக்கப்புகுந்த நம்மாழ்வாரும் "கடல்ஞாலம் செய்தேனும் யானே யென்னும்" என்று முந்துறப் பேசினது இதனையே. மாறனடி பணிந்துய்ந்த இராமாநுசனும் ஸ்ரீ பாஷ்யத்தின் உபக்ரமத்தில் "அகிலபுவநஜந்ம" (அகிலபுவநஜந்ம) என்று இந்தக் காரணத்வத்தையே பேசியிருந்தார். உபநிஷத்துக்களெல்லாம் ஒருமிடறாக "காரணந்து த்யேய:" (காரணந்து த்யேய:) இத்தியாதிகளாலே காரணவஸ்துவையே உபாஸிக்கும்படி விதித்திருப்பதனால், எம்பெருமானைக் காரணபூதனாக நாம் நன்றாகத் தெரிந்துகொள்ளவேணும்.

இவ்வுலகத்திற்குக் காரணமான வஸ்து யாதொன்றும் கிடையாதென்றும், எல்லாம் இயற்கையாகவே ஜனிக்கிறதென்றும் கூறுகிற இதரவாதிகளை விட்டிடுவோம். அநுமானத்தாலே ஒரு ஈச்வரனை ஸாதித்து அவனை ஜகத்காரணமாகக் கொள்ளுகிற நையாயிகர்களையும் விட்டிடுவோம். ப்ரமாணத்தையே கணிசித்துக்கொண்டு அதனாலேயே ஈச்வரனையும் அவனுடைய காரணத்வத்தையும் பேசுகின்ற பரம வைதிகர்களின் உக்திகளையே பின்சென்று நாம் பேசக்கடவோம்.

முற்காலத்தில் ஒருவன் ஶாஸ்திரங்களையெல்லாம் படித்திருந்தும் ஆஸ்திக்ய மில்லாமையினாலே ஈஶ்வரன் காரணமல்லன் என்றே யெண்ணியிருந்தான்; அவன் ஒருநாள் வெளியே புறப்பட்டுப் பற்பல வற்றையும் ஆழ்ந்து நோக்குமிடத்து, இப்படி விசித்திரமான பிரபஞ் சங்களைப் படைத்தவன் விலக்ஷணசக்தியுக்தனான வொரு முழுமுதற் கடவுளாகவேயிருக்கத் தகும் என்றெண்ணி, வழிநடந்துகொண்டே போம்போது மிகப் பெரிய ஆலமரமொன்றையும் பூசினிக்கொடியை யும் பார்த்து, ப்ரபஞ்ச கர்த்தாவான ஈச்வரன் புத்திசாலியல்லன் போலும் என நினைத்தான்; ஏன்? மிகப் பெரிதான ஆலமரத்திற்கு மிகச் சிறிய காய்களையும், மிகச் சிறிதான பூசினிக்கொடிக்கு மிகப் பெரிய காய்களையும் படைத்திருக்கக் கண்டதனால்.

இங்ஙனே சிந்தித்துக்கொண்டே அவன் வழிநடந்த ஆயாசத்தி னால் அந்த ஆலமரத்தினடியிலேயே கிடந்து நெடுநேரம் உறங்கிவிட் டான். பிறகு கண்விழித் தெழுந்ததும் தன் உடல் முழுவதிலும் ஆலங்கனிகள் விழுந்திருந்ததைக் கண்டு, 'அஹஹ! எம்பெருமா னுடைய புத்தியின் பெருமையை என்ன சொல்லுவேன்!' என்று மிகவும் வியந்தான். முன்பு தான நினைத்தபடி அவ்வாலமரத்திற்குப் பெரிய காய்கள் இருந்திருக்குமானால் அவை விழுந்து தன் மார்பு பிளந்திருக்குமன்றோ. ஆலமரம் மற்ற மரங்களைப்போலல்லாமல் நிழ லுக்காக அனைவராலும் ஆஶ்ரயிக்கப்படக் கூடியதாதலால் இதற்குப் பெருத்தகாய்கள் இருக்கலாகாதென்றும், பூசினிக்கொடி நிலத்தின்மீது படர்வதாதலால் எவ்வளவு பெரிய காயாயிருப்பினும் ஸர்வம்ஸஹை யான பூமிப்பிராட்டி தாங்குகின்றாளாதலால் அதற்குப் பெரிய காய் கள் இருக்கலாமென்றும் இவ்வளவு விசாலமாகத் திருவுள்ளங் கொண்டு ஒவ்வொரு அமைப்பையும் ஜனங்களின் ஸௌகரியத்திற்கு ஏற்பவே செய்தருளியிருக்கின்ற மிகு ஞானச் சிறு குழவியான ஸர் வேஶ்வரனை புத்திஹீநனாக நினைத்தேனே பாவியேன்! என்று தன் னைத் தானே நொந்துகொண்டனனாம்.

இங்ஙனம் பாமரர்களும் அதிசயிக்கக்கூடிய விலக்ஷணமான சக்தி யும் ஞானமும் வாய்ந்த பரமபுருஷனையே இவ்வுலகம் காரணமாகக் கொண்டிருக்கவும் அவனுக்குக் காரணத்வத்தை இசையாதே ப்ர க்ருதியே காரணமென்றும் ஜீவனே காரணமென்றும் கூறுகின்ற பிறசமயிகள் கிடக்க. எம்பெருமானே ஸகல ஜகத்காரண பூதன் என்று நாம் தெரிந்துகொண்டபின் அதிலுமுட்புகுந்து இன்னமுஞ் சில விஷ

யங்களை தெரிந்துகொள்ளவேண்டியவையுண்டு. உலகில் ஒரு காரியப் பொருள் பிறக்கவேணுமானால் மூவகையான காரணப்பொருள்கள் இருந்துதீரவேண்டும். பானையென்கிற ஒருபொருள் உண்டாகவேணுமானால் மண்வேண்டும், தண்ணீர் தடி சக்கரம் முதலியனவேண்டும், குயவன் வேண்டும். இப்படியே துணியென்கிற வொருபொருள் உண்டாகவேணுமானால் நூல் வேண்டும், நசவுப் பலகை முதலியன வேண்டும், சேணியன்வேண்டும். இத்தகைய காரணப்பொருள்களை உபாதான காரணமென்றும் ஸஹகாரி காரணமென்றும் நிமித்தகாரண மென்றும் ஶாஸ்த்ரஜ்ஞர்கள் கூறுவார்கள். எந்த வஸ்துதானே காரிய வஸ்துவாக மாறுதலையடைகின்றதோ அது உபாதான காரணமெனப் படும். மண்தானே பானையாக மாறுகின்றது, நூல்தானே துணி யாக மாறுகின்றது. ஆகவே அவை உபாதான காரணமாம். தண்ணீர் தடி சக்கரம் முதலியவை பானையை யுண்டாக்குவதற்குத் துணைக் கருவிகளாக நிற்பதனால் அவை ஸஹகாரி காரணமெனப்படும். மேற் கூறிய இருவகைக் காரண வஸ்துக்களையுங் கொண்டு கர்த்தாவாக நிற் கிறவன் நிமித்தகாரண மெனப்படுவான். காலம் அதிருஷ்டம் முதலி யனவும் இவ்வகுப்பிற் சேரும். ஆக இப்படிப்பட்ட மூவகைக் காரணங்களும் காரிய ஸ்ருஷ்டிக்கு இன்றியமையாதனவாதலால் மிக விரிவான இந்த ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டிக்கு ஸர்வேஸ்வரன் நிமித்த காரணமென்கிற ஒரு காரணமாகத்தானே இருக்கமுடியும், மற்ற உபாதான காரணமும் ஸஹகாரி காரணமும் எவை? என்று கேள்வி பிறக்கக்கூடும். மூவகைக் காரணங்களும் பகவானே என்று சாஸ்த் ரங்கள் கூறும். அது எங்ஙனே பொருந்தும் என்கிற ஆக்ஷேபங் களும் அவற்றின் ஸமாதானங்களும் அடுத்த ஸஞ்சிகையில் வெளி வரும்.

---

## நம்பெருமாள் திருமஞ்சனமும் பட்டர் ஈடுபாடும்

[பெருமாள் கோவில்
ப்ரதிவாதி பயங்கரம் ஸ்ரீ உ. வே. அண்ணங்கராசாரியார்]

கூரத்தாழ்வான் திருக்குமாரராகிய ஸ்ரீ பராசர பட்டர் கோயி லில் வாழும் நம்பெருமாளுடைய திருமஞ்சனங்களை ஸேவிக்குங் காலங்களில் அந்த ஸந்நிவேசத்தில் ஈடுபட்டும் வடிவழகில் ஈடுபட்டும் சமத்காராதிசயம் பொலியப் பலச்லோகங்களை அருளிச் செய்திருக்கி

றார். அவை நாளைக்கும் அவருடைய திருவம்சஸ்தர்களால் திருமஞ்சன ஸமயங்களில் விண்ணப்பம் செய்யப்பட்டு வருகின்றன. அவற்றுள் "த்வம்மேஹம்மே" என்கிற ஒரு ச்லோகம் மிகவும் அற்புதமாக அமைந்தது. இதனை நம் ஆசாரியர்கள் வியாக்யான க்ரந்தங்களிலே கையாண்டு வருகின்றனர். இதன் அரிய பெரிய பொருள் இங்கு விவரிக்கலாகிறது. ஸ்ரீ ரங்கநாதன் தோளிணை மேலும் நன் மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாய் மாலையையுடையனாய்த் திருமஞ்சனங் கொண்டருள ஸந்நத்தராயிருக்கும் படியைப் பார்த்தால் பிரமாணம் செய்ய ஸித்தராயிருக்கிறாரோ என்று உத்ப்ரேக்ஷிக்கலாம்படி யுள்ளது என்று பட்டர் திருவுள்ளம் பற்றுகிறார். உலகத்தில் பிரமாணம் செய்பவர்கள் துளசிமாலை யணிந்துகொண்டு ஒரு முழுக்குப் போடுவது வழக்கமாதலால் எம்பெருமானும் அங்ஙனே செய்கிறானே என்று உல்லேகிக்கிறார். பிரமாணம் செய்யவேண்டிய ஆவச்யகதை எம்பெருமானுக்கு என்ன வந்தது என்னில், உலகத்தில் பிரமாணம் செய்பவர்கள் எதற்காகச் செய்வது வழக்கம் என்று பார்த்தால், ஒருவன் தன்னுடைய ஸொத்தைப் பிறன் கொள்ளை கொண்டால் அதைத் தனக்கு ஸ்வாதீனப் படுத்தித் தரவேணுமென்று நியாயாலயத்தில் விண்ணப்பம் செய்துகொண்டு உண்மையில் அந்த ஸொத்து யாருடையது என்று தெரிந்து கொள்வதற்காக ஸாக்ஷி விசாரணை முதலியன செய்யப்படுங் காலத்திலே தகுந்த ஆதாரங்களைக்கொண்டு உண்மையை ஸ்தாபித்துக்கொள்ள முடியாமல் அந்தோ! நம்முடைய ஸொத்தை அநியாயமாக இழந்துவிட நேருகின்றதே! என்கிற அநுதாப முடையார் கடைசியாக ஒரு வார்த்தை சொல்லுவதுண்டு. "இது என்னுடைய ஸொத்துதான் என்று பிரமாணம் செய்ய நான் துளசிமாலை யணிந்து முழுக்கிட்டு விடுகிறேன்; நியாயாதிபதிகள் அது கொண்டாவது உண்மை யுணரவேண்டும்" என்பர்கள். நியாயாதிகாரிகளும் அதனை ஆதரித்துத் தீர்ப்புக் கொடுப்பதுண்டு. இது இன்னமும் வழக்கத்திலுள்ளது. இவ்விதமாகவே எம்பெருமானுக்கும் பிரமாணம் செய்யவேண்டிய ஆவச்யகதை நேர்ந்து விட்டதாம். அது ஏதெனில், சேதநவர்க்கம் என்கிற ஸொத்து எம்பெருமானுடையது; ஆனால் அந்த ஸொத்தை "கிம்தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா" என்றும் "பண்டே யுன் தொண்டாம் பழவுயிரை யென்னதென்று கொண்டேன்" என்றுஞ் சொல்லுகிறபடியே ஸம்ஸாரிகள் கொள்ளை கொண்டார்கள். இந்த

ஸொத்து என்னுடையது என்கிறான் எம்பெருமான். ஸம்ஸாரிகளோ 'இது உன்னுடையதல்ல, எங்களுடையதே' என்கிறார்கள். இவர் தம் முற்றிவிட்டது ஸம்ஸாரிகள் அடாவடியில் பலிஷ்டர்களாகை யாலே அவர்களுடைய வாதமே மேம்பட்டு எம்பெருமானுடைய வாதம் தோல்வி யடையும்படியான நிலைமையிலே வந்துவிட்டது. அந்தோ! அந்யாயமாய் நம்முடைய ஸொத்தை இழந்துவிட நேரு கின்றதே! என்கிற பரிதாபம் எம்பெருமானுக்கு உண்டாய் விட்டது. 'இந்த ஸொத்து என்னுடையதுதான் என்று ப்ரமாணம் செய்தாகி லும் இதனை நாம் இழவாமல் அடைந்தே தீரவேண்டும்' என்கிற அபிநிவேசம் எம்பெருமானுக்கு உண்டாய் விட்டது. அது துளசி மாலை யணிந்து முழுக்கிட்டுச் செய்யவேண்டிய காரியமாதலால் இந்தத் திருமஞ்சன மென்கிற வியாஜத்தாலே அது செய்யப்படுகிறது போலும் என்பது பட்டருடைய உல்லேக சமத்காரம்.

ஈச்வரனுக்கும் சேதனனுக்கும் நடந்த விவாதம் ஒரு ஸம்வாத ரூபமாக இந்த ச்லோகத்தில் அழகாய்க் காட்டப்படுகிறது. ச்லோகம் வருமாறு —

[illegible]

த்வம் மே ஹம் மே குதஸ் தத் ததபி குத இதம் வேதமூலப்ரமா ணாத், ஏதச்சாநாதிஸித்தாதநுபவவிபவாத் ஸோபி ஸாக்ரோச ஏவ, க்வாக்ரோச: கஸ்ய கீதாதிஷு மம விதித: கோத்ர ஸாக்ஷீ ஸுதீஸ் ஸ்யாத் ஹந்த த்வத்பக்ஷபாதீ ஸ இதி ந்ருகலஹே ம்ருக்யமத் யஸ்தவத்த்வம்.

இதன்பொருள் சுருக்கமாகக் காட்டப்படுகிறது

த்வம் மே - இது எம்பெருமான் ஸம்ஸாரிசேதனனை நோக்கிச் சொல்லும் வார்த்தை. சேதனா! நீ என்னுடைய சரக்கு என்கிறான் எம் பெருமான். அதாவது நீ எனக்கு அடிமைப்பட்டவனென்றபடி. சேதனன் ஸ்வாதந்த்ரியம் பாராட்டி வணங்காமுடிமன்னனாய்க் கிடந்த படியாலே எம்பெருமான் இந்தவார்த்தையைச் சொல்லவேண்டியதாயிற்று.

அஹம் மே - அதற்கு ஸம்ஸாரி பதில் சொல்லுகிற வார்த்தை இது. நான் உனக்கு அடிமைப்பட்டவனல்லேன், எனக்கு நானே அரசன் என்றான் ஸம்ஸாரி. எம்பெருமான் "த்வம் மே" என்றது போலே ஸம்ஸாரியும் பதிலுக்கு 'த்வம் மே' என்னலாமே; அப்படி ஏன் சொல்லவில்லை? 'நானு உனக்கு அடிமைப்பட்டவன், நீதான் எனக்கு அடிமைப்பட்டவன்' என்று ஸம்ஸாரி சொல்லியிருக்க லாமே; ஏன் அங்ஙனம் சொல்லவில்லை என்னில், இப்படிப்பட்ட பதில் ஸம்ஸாரி சொல்லியிருந்தானாகில் எம்பெருமான் பெரும்பேறு பெற்றானவனே; தான் சேஷியாயிருப்பதிலுங்காட்டில் சேஷபூதனா யிருக்குமிருப்பிலே மிகவும் குதூஹலமுடையானன்றோ அவன். ஏதேனுமொருபடியாலே சேதநனோடு தனக்கு ஸம்பந்தம் ஏற்பட்டால் போதும் என்று பாரிப்பவனன்றோ அவன்; சேஷியாகவே தா னிருக்கவேணுமென்கிற எண்ணம் இல்லையே அவனுக்கு. ஸம்ஸாரி கள் தன்னோடு உறவை அறுத்துக்கொண்டுபோகாமல் தன்னை அடியவ னாகக்கொண்டு பரிமாறினாலும் பரமதிருப்தி பெறுபவனன்றோ அவன். அது தோன்றவன்றோ 'த்வம் மே' என்று ஸாவசேஷமாய்க்கிடக் கிறது. த்வம் மே தாஸ: என்றோ, த்வம் மே ப்ரபு: என்றோ விவ க்ஷித்துச் சொன்னபடி. ஏதேனுமொருபடிக்கு ஸம்ஸாரி இசைந்திடு வனோ என்று பார்த்தான் எம்பெருமான். ஸம்ஸாரி மஹாசதுரனாகை யாலே 'இவனோடு நமக்கு எவ்விதமான உறவும் தேவையில்லை; அவன் நமக்கு அடியவனாக இருக்க இசைந்தாலும் அதற்கும் நாம் இசையவே கூடாது; அடியவன்போல இருந்து காலக்ரமத்தில் நம் மையே அடிமைப்படுத்திக்கொள்ளவல்ல கிறியான் அவன்; ஆதலால் அவனுடைய எல்லையிலும் நாம் செல்லாமல் இருந்துவிடுவதே நமக் குத் தகுதி' என்று ஸம்ஸாரி நினைத்தானாகையாலே அஹம் மே என்று, எம்பெருமானுக்குப் பிடிகொடாமலே விடையளித்து விட் டான். இவனும் த்வம் மே என்று பதில் சொல்லி யிருந்தானாகில் அவ் வளவோடு விவாதம் சாந்தமாகியிருக்குமே; எம்பெருமானே வெற்றி பெற்றானாய்விடுவனே.

குதஸ் தத் - (தத் குத:?) 'அஹம் மே' என்று சொன்ன ஸம்ஸாரியை நோக்கி எம்பெருமான் கேட்கிறான். எதனால் அப்படிச் சொல்லுகிறாய்? என்று.

தத் அபி குத:? நீ த்வம் மே என்று சொன்னாயே, அது எதைக்கொண்டு சொன்னாய்? என்று ஸம்ஸாரியின் பதில்கேள்வி இது.

இதம் வேதமூலப்ரமாணம் - சேதன! வேதமாகிற மூலப்பிரமாணத்தைக்கொண்டு நான் தவம் மே என்று சொன்னேனே என்கிறது எம்பெருமானுடைய பதில் — "பதிம் விஶ்வஸ்யாத்மேஶ்வரம்" "க்ஷரம் ப்ரதாநமம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநாவீஶதே தேவ ஏக:" இத்யாதிப்ரமாணங்கள் இங்கு கொள்ளத்தக்கன

ஏதச்ச அநாதிஸித்தாத அநுபவவிப்லவாத் - (இது ஸம்ஸாரியின் பதில் வார்த்தை) நீ சொல்லுகிற ப்ரமாணம் ஓலைப்பட்ட ப்ரமாணமாகையாலே வெளிக்கு வரமாட்டாதது, அன்றும் மே என்று சொன்ன எனக்கு ஸாதகமான ப்ரமாணம் அப்படிப்பட்டதன்று அநாதிகாலமாக ஸ்வாதந்திரியத்தை நான் அநுபவித்துக்கொண்டு வருவதால், அநுபவமே ப்ரபல ப்ரமாணமாகையால் இதனால் உன்னுடைய வேதம் அடிபட்டொழிந்தது என்றான் உலகத்திலும் ஒரு க்ருஹம் ஒருவனுடையதென்று சாஸனபத்திரங்கள் இருந்தாலும் நெடுநாளாக அந்த க்ருஹத்தை வேறொருவன் அநுபவித்துவந்தால் அவனே அதற்குச் சொந்தக்காரனாகி ஆய்விடுவான் என்றும், உண்மையான உடையவன் இழந்துபோய்விடுவான் என்றும் காண்கிறோம். அதுபோல, எம்பெருமானே உடையவனென்று சாஸனமிருப்பினும் அநாதியான அநுபவம் ஸம்ஸாரியினுடையதாகையாலே அந்த சாஸனம் துர்ப்பலமாக இவனால் நிரூபிக்கப்பட்டது ஸம்ஸாரியும் க்ரமமான வழியிலேயே வழக்காடுகிறான் போலும்

ஸோபி ஸாக்ரோஶ ஏவ - (அதற்கு எம்பெருமானுடைய பதில் இது) சேதனா! நெடுங்காலமாக உனக்கு ஸ்வாதந்த்ரிய அநுபவம் உண்டென்பது உண்மையே, அதை நான் அபலபிக்கவில்லை. ஆனால் அந்த அநுபவம் நிராக்ஷேபமாக இருந்தாலன்றோ செல்லும். அப்படியில்லையே உனது அநுபவம் ஆக்ஷேபத்தோடு கூடியதாயிற்றே! அதை நீ சொல்லிக்கொள்வதனால் உனக்கு லாபமில்லையே என்றானெம்பெருமான். உலகத்திலும் ஒரு க்ருஹத்தை இதரன் ஒருவன் நெடுநாளைய அநுபவத்தில் வைத்துக் கொண்டிருந்தாலும் அந்த அநுபவத்தை அடிக்கடி சொந்தக்காரன் ஆக்ஷேபித்துக் கொண்டிருந்ததாகப் புலப்பட்டு விட்டால் அவ்வநுபவம் செல்லமாட்டாதென்பது ப்ரஸித்தம்

ஆக்ரோஶ: க்வ? கஸ்ய ஆக்ரோஶ:?—(இது ஸம்ஸாரியின் வினா) என்னுடைய ஸ்வாதந்திரியாநுபவம் ஆக்ஷேபத்தோடு கூடியதென்று நீ சொன்னாய், அப்படிச் சொல்லிவிட்டால் போதுமா? ஆக்ஷேபம்

செய்திருப்பது யார்? ஆக்ஷேபம் எவ்விடத்தில் செய்யப்பட்டிருக்கிறது? அதையெல்லாம் விசதமாகச் சொன்னாலல்லவோ உன்னுடைய வாதம் ஏறும்.

கீதாதிஷு மம விதித:— (இது எம்பெருமானுடைய மறுமொழி.) க்வ என்று கேட்டதற்கு 'கீதாதிஷு' என்பது பதில். கஸ்ய என்று கேட்டதற்கு 'மம' என்பது பதில். சேதநா! பகவத்கீதை முதலானவற்றிலே (உன் ஸமூஹத்தில் தலைவனான அர்ஜுனனென்கிற வொருவனை வைத்துக்கொண்டு) சேதநஸ்வாதந்த்ரியத்தை நான் ஆக்ஷேபித்திருக்கிறேனென்பதை நாடு நகரமும் நன்கறியும். என்றைக்கோ ஒருநாள் ஏதோவொரு மூலையிலே நீ ஆக்ஷேபித்திருந்தால் அது செல்லுமோவென்று ஸம்சாரி சொல்லுவதற்கு இடமில்லாதபடி 'விதித:' எனப்பட்டது. கீதை நடையாடாத இடமில்லை; கீதைக்கு ப்ரசாரமில்லாத காலமுமில்லை; கீதையைத் தெரிந்துகொள்ளாத வ்யக்தியுமில்லை என்ற அபிப்ராயங்கள் இச்சொல்லில் பொதிந்துள.

அத்ர க: ஸாக்ஷீ— (இது ஸம்ஸாரியின் கேள்வி.) வ்யவஹாரம் என்று வந்துவிட்டால் ஸாக்ஷி விசாரணை இருந்தே தீரவேண்டும். எத்தனை சாஸநபத்திரங்கள இருந்தாலும் ஸாக்ஷிகளைக்கொண்டு நிரூபிக்கவேண்டியது முறைமை. உனக்கு ப்ரமாணமான வேதங்களும் கீதை முதலியனவும் கிடக்கட்டும். பெட்டியின்மீது ஏறிச சொல்லுவதற்கு ஒரு ஸாக்ஷி வேணுமே. யார் ஸாக்ஷி? என்கிறான் ஸம்ஸாரி. எம்பெருமான் தவிர மற்ற எல்லாச் சேதநர்களும ஸம்ஸாரிகளே யாதலால், அவர்களும் அஹம் மே என்றிருப்பவர்களேயாதலால் இவனுக்கு ஸாக்ஷிகள் எங்ஙனம் கிடைக்கப் போகிறார்களென்பது சேதநனுடைய எண்ணம். எம்பெருமானுடைய பாக்யததாலே ஸம்ஸாரிகளினிடையே முமுக்ஷுக்களும் சிலர் இருப்பதால் அவர்கள் தனக்கு ஸாக்ஷிகளாக இருக்கத் தகுதியுடையார் என்றெண்ணின எம்பெருமான் ஸாதவ: ஸ்யாத் என்றான். ஞானிகளெல்லாரும் என் பக்ஷத்தில் ஸாக்ஷிகளாக நிற்கக்கூடும் என்றபடி. (ஸாதவ: என்பதை ஜாத்யேகவசநமாகக் கொள்க.) அஸ்தி என்று உறுதியாகச் சொல்லாமல் ஸ்யாத் என்று சொன்னது ஏனெனில், இவ்விருள் தருமா ஞாலமானது ப்ரஹ்லாதாழ்வானையு முட்பட எதிரமபு கோக்கப் பண்ணினதாகையாலே ஞானிகளும் ஸமயத்திலே நம்மைக் கைவிடும்படி நேர்ந்துவிடுமோ என்னவோ என்கிற அதிசங்கை தோன்றி அதை ஸ்யாத் என்பதனால் காட்டினனென்க. "விண்ணுளார் பெருமாற்கு

அடிமை செயவாரையும செறும ஐமபுலனிவை" ஆதலால யாரையும நமபுவதறகிலலையே எனறெணணினன போலும.

ஹநத ! தவதபக்ஷபாதீ ஸ - (இது ஸமஸாரியின பதில) ஸாக்ஷிகள மதயஸதாகளாக இருககவேணடும உறவினாகளையே கொணடு சொலலுவிககபபடுகிற ஸாக்ஷியம உபயோகபபடாது ஞானிகளை ஸாக்ஷியாகச சொனனது பொருநதுமோ ? "ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" எனறு கீதையில நீயே சொலலியிருககிறாயே, உனது உயிர நிலையாகவனறோ ஞானிகள இருபபது வாதியே ஸாக்ஷி எனறு சொனனதாகத தேறறமேயலலது பிறனொருவன ஸாக்ஷியாகக கூறப பட்டானிலலையே எனறான ஸமஸாரி

இதறகுமேல எமபெருமான எனன செயவான ! ஸமஸாரிகள யாவரும பிரதிவாதிகளாக ஆயவிட்டபடியால அவாகளில ஒருவரும ஸாக்ஷிகளாக நிலலா முமுக்ஷுககளோ தன வகுபபில சோநது விட்டபடியாலே அவாகளுடைய ஸாக்ஷியம அபரயோஜகமெனறு கணணழிககபபடுகிறது. அபபடிபபட்ட ஸமஸாரிகளையும விட்டமாட டிறறிலன. வயவஹாரததிலோ தான தோலவியடையவேணடியவ னாக முடிநதுவிட்டது. 'நமமுடைய சாககுகளை நாம அநியாயமாய இழநதுவிடுவதா !' எனறு பரிதபிககினறான. இநத நிலைமையில் தைவாதீனமாய ஒரு உபாயம ஸ்புரிததது, அதாவது, ஸமஸாரியி னுடைய வாயாடிததனததினால நமககு வயவஹாரததில பழுது ஏற பட்டாலும ஸொதது நமமுடையதேயெனபது ஸதயமாதலால, கடைசியாக பரமாணமபணணிககொடுதது ஸொததைபபெறறுக கொளவதான முறைமையும அரசாஙகததில இருபபதால அநத வகையில நாம வெறறிபெறககடவோம எனறு தோனறிறறும.

[இதி ந்ருகலஹே ம்ருகயமத்யஸதவத தவம]

இதி - இவவிதமாக, ந்ருகலஹே - சேதநனோடு விவாதமுண டாகித தனககுத தோலவி விளைநத வளவில, தவம ம்ருக்யமதயஸத வத (பரகாசஸே) = தேவரீா பரமாணம செயய ஸநநதாபோலே விளஙகா நினறீா "ப்ராணம் கண்டகதேசஸ்தே ச்ருத்யோவஸ உத்யதே" எனபது நிகணடு

இநத உதபரேக்ஷையினால நமககுக கிடைககும பொருள யாதெனில, எமபெருமானோடு நாம விவாதபபடாமல இருககுமளவே போதுமெனபதும, எவவகையினாலேனும நமமை அடிமைபபடுததிக கொளள அவன வழிதேடுகினறவன எனபதும, நாமெலலாம அவ

னுடைய உடைமை யாதலால் நம்மை ஆட்படுத்திக்கொள்வதிலேயே நோக்குடையனை அவனை நினைத்து நாம் மார்பிலே கைவைத்துறங்கலா மென்பதுமாம்.

பட்டர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ

## ஆத்ம ஸமர்ப்பணம்

[C. நரஸிம்மாசாரியார், அட்வகேட், திருவல்லிக்கேணி]

ஆத்ம ஸமர்ப்பணம் என்பது ச்ருதிகளில் ச்லாக்யமாகச் சொல்லப்படும் மோக்ஷோபாயமாம். ஆத்ம ஸமர்ப்பணம் என்றால் ஜீவாத்மாவை பரமாத்மாவுக்கு ஸமர்ப்பித்தல் என்று பொருள்படும். ஆனால் ஜீவாத்மா "அதனுள் நேர்மை ஒன்றும் ஒருவர்க்கும் உணரல் ஆகாது" என்கிறபடி பாஹ்யேந்திரியங்களுக்கு விஷயமாகாததாலும் பரமாத்மாவும் அதீந்திரியனாகையாலும் இந்த ஸமர்ப்பணம் புஷ்பம் மாலையை ஒரு அர்ச்சாவதாரத்து எம்பெருமானுக்கு ஸமர்ப்பிப்பது போல் கைகளால் செய்யும் காரியமன்று. நம் பூர்வாசாரியர்கள் ஜீவாத்மா பரமாத்மாவுக்கே உரித்தானது என்று ஸம்வநித்தைதான் ஸமர்ப்பணம் என்பார்கள். இந்த ஸம்வதம் கேவலம் நெஞ்சினால் நினைத்த மாத்ரமாவது வாயினால் சொல்லிய மாத்ரமாவது ஸித்திக்காது. மனோவாக்குக்காயம் என்கிற த்ரிவித காரணங்களாலும் அநுஷ்டாநத்துக்குக் கொண்டுவந்து காரியகரமாக்க வேணும். நெஞ்சினால் நினைப்பதும் வாயினால் சொல்வதும் ஒன்றாய், செய்வது வேறொன்றானால் அது வஞ்சனையும் கூத்துமாகும். "பொய்யே கைம்மை சொல்லி" என்றும் "என்றென்றே சில கூத்துச் சொல்ல" என்றும் ஆழ்வார் ஸர்வேச்வரனை வஞ்சிக்க முடியாது என்பதற்கு அவரவர்கள் மனச்சாக்ஷியமே ப்ரமாணமாகும் என்பர். ஆகையால் ஆத்ம ஸமர்ப்பணத்துக்கு "யான் எனது என்று இராதே", "யானும் நீயே என் உடைமையும் நீயே" என்கிற திடாத்ய வஸாயத்தோடு நம்முடையது என்கிற ஸர்வஸ்வத்தையும் எம்பெருமானுக்கு அர்ப்பணம் செய்யவேண்டும். இந்த அர்ப்பணம் காரியகரமாவது கைங்கரியத்தாலன்றி மற்றெவ்வகையாலும் முடியாது என்பதை ஆழ்வார்களும் ஆசாரியர்களும் ஓமிட்டு ஸாதிப்பார்கள். அந்த கைங்கரியம் ப்ரீதிகாரிதமான பாகவத கைங்கரிய பர்யந்தமான பகவத் கைங்கரி

யம் என்று அறுதியிட்டார்கள். பாகவத கைங்கரியமே பகவத் கைங்கரியமாய் பர்யவஸிக்கும். கைங்கரியத்தில் "யான் எனது" என்னும் அஹங்கார மமகார ஞானம் தன்னடையே கைவிட்டுப்போய் "என்னதாவியார்? யான் ஆர்? தந்த நீ கொண்டு ஆக்கினையே" என்கிற ஞானம் பிறந்து, அந்த ஞானம் அநுஷ்டானத்தில் பரிமளிக்கும். இதனையே "Love & Service" என்று ஏனைய மதஸ்தர்கள் எல்லாரும் கொண்டாடுகிறார்கள். இதுதான் வேதஸாரமாய் ஸ்ரீ வைஷ்ணவ மதத்தின் ஸாரமுமாகும்

ஆனால் இத்தகைய அத்யவஸாயம் பிறக்காமல் தடுக்கும் பலமான பகைவர்கள் நம்முடைய பஞ்சேந்திரியங்களே! "விண்ணுளார் பெருமாற்கு அடிமை செய்வாரையும் செறும் ஐம்புலன் இவை மண்ணுள் என்னைப் பெற்றால் என் செய்யா" என்றும் "தீமறுத்து இன்றி ஐந்து நோய் ஆடும் செக்கிலிட்டுத் திரிக்கும் ஐவர்" என்றும் ஆழ்வார் இந்திரிய பலத்தைப் பார்த்து நடுநடுங்குகிறார். அல்பமதிகள் படும்பாடு சொல்லவேண்டா. நமக்கு கிருத்யா கிருத்ய விவேக ஞானம் இருந்தபோதிலும் நன்மையும் தீமையும் விவேகிக்க பரதீபமான சாஸ்த்ர ஞானம் உண்டாயிருந்தாலும் விஷயாந்தரங்களில் மனதை வலித்துச் செல்லும் வீர்யமுடையன நம் இந்திரியங்கள். மநுஷ்ய சஞ்சாரமில்லாத காட்டில் கிடந்தாலும் நம்மை விட்டபாடில்லை. ஆதிபரதன் மான் பின்னே சென்றும், ஸௌபரி நீரில் முழுகிக் கிடக்கச் செய்தேயும் மீன் பின்னே சென்றும் விஷயப்ரவணரானார்கள்

தாமஸீய ஞானத்தாலே ஹ்ருஷ்டரான ரிஷிகள் காமஜ்ஞான ஸம்ஸ்காரங்களாகிற யோகாப்யாஸங்களாலே இந்திரியங்களை ஜயிக்கும் வழிகள் காட்டியுள்ளார். சுருதிகளில் வேதனம், உபாஸனம், ஸேவை, த்யானம் என்று இம்முறைகளை பல்வகையாக கூறப்பட்டுள்ளன. ஸோபப்ருஹ்மண சாஸ்திரங்களில் சொல்லியபடி இந்திரிய ஜயம் பெற்று பக்தியை அடையும் வழியைப்பார்த்தால் லௌகிக பராவர்த்திகளான அடியேன் போன்ற கேவலர்களுக்குக் "கால் ஆழும் நெஞ்சு அழியும் கண் சுழலும்." எங்ஙனே யென்னில் "ஜந்மாந்தர ஸஹஸ்ர நற்றவங்களாலே கயாத குலங்களிலே பிறந்து எழுதி வாசித்து தத்வஜ்ஞராய்" காயக்லேசமாக த்ரிகால ஸ்நானம் செய்து ஸந்த்யாவந்தனம் காயத்ரீ ஜபங்கள், பஞ்ச மஹாயஜ்ஞங்கள், ஷட்கர்மங்கள் முதலான நித்ய நைமித்திக கர்மாநுஷ்டானங்களால் பரிபூர்ணனாய் -துபச்சாய யோகயத்தை பிறந்தவாறே காட்டேறப்போய் உஷ்ண காலத்தில் மலைச் சிகரத்திலும் பஞ்சாக்னி மத்தியிலும் நின்றும், குளிர்காலத்

[illegible]த்தில் மூழ்கியும் ஜீர்ணபர்ணபலாசநராய் காயசோஷம் [illegible], சமம், தமம் முதலான ஆத்மகுணங்கள் பரிபூர்ண[illegible]த்தான எம்பெருமான் வடிவைக் "கண்கள் சிவந்திற்" [illegible]கொண்டு ஆத்மஸாக்ஷாத்காரம் செய்து பிறகு பகவத் ஸாக்ஷாத்காரம் செய்யவேணும். இத்தகைய கர்மஞான ஸம்ஸ்க்ரு[illegible]களைக் காண்பது மிகவும் துர்லபம். "இன்னதோர் காலத்து இனியார் இது பெற்றார் என்னவுங் கேட்டறிவதில்லை" என்றார் மங்கை மன்னனும். வேதத்தின் உட்பொருளே நம் நெஞ்சுள் நிற்கப் பாடின நம்மாழ்வார் இந்த ஆத்ம ஸமர்ப்பணக்ரமத்தை "விடுமின்" என்கிற இரண்டாந்திருவாய் மொழியில் ஸர்வஸுலபமாக யாவரும் எளிதில் அறியும்படி உபதேசித்திருக்கிறார். இந்த உபதேசத்துக்கு சாஸ்திர ப்ரமாணமாவது ஸதாசார்ய உபதேசமாவது வேண்டுவதில்லை. ஆஸ்திக நாஸ்திகர்கள் அனைவரும் அறியக்கூடியது. அது எப்படி என்னில், தேகமும் தேகஸம்பந்தமான சுகதுக்கங்களும் அநித்யம் என்பதை "மின்னின் நிலையில" என்கிற பாசுரத்தில் விஸ்தரித்தார். இது யாவரும் கண்டு அநுபவிக்கும் விஷயமே. ஆகையால் அநித்யத்தைக் கைவிட்டு நித்யத்தைக் கைப்பிடிப்பது இயற்கையறிவாகும். நித்யமும் நித்யாநுபவமும் இன்னதென்பதை முதல் திருவாய் மொழியில் பல காரணங்களைக்கொண்டு நிரூபித்தார். சில வருஷங்களுக்கு முன் நவீன சாஸ்த்ர ஆராய்ச்சிக்காரர் பலர், நிரீசுவர வாதிகளாயிருந்தார்கள். தற்சமயம் அவ்வாராய்ச்சிக்காரர் பலரும் ஈச்வரதத்வம் ஒன்று இருந்தலே வேண்டும் என்று சொல்லுகிறார்கள். அமெரிக்கா தேசத்துப் பண்டிதர் ஒருவர் சூரிய மண்டலத்திலிருந்து இரண்டு வகையான கிரணங்கள் வருகின்றன என்றும், அதில் ஒன்று உயிரை அளிக்கும் என்றும், மற்றொன்று அழிக்கும் என்றும் அழிக்கும் கிரணம் வாயுமண்டல ஸ்பர்சமானவுடன் அங்கேயே தங்கி அக்காற்றை சுத்தமாக்கி நமக்கு பிராணாதாரமான சுத்தக் காற்றை உண்டுபண்ணுகிறது என்கிறார். இது யாருடைய மஹோபகாரம், யார் செய்யும் நன்மை? அவர் தான் "உயர்வற வுயர் நலமுடையவன்" என்றார் ஆழ்வார். அவ்வுயர் நலமுடையவனை அடையவேண்டுமானால் அகங்கார மமகாரங்களை ஸவாஸனையற விடவேண்டும் என்று "நீர் நுமது" என்கிற பாசுரத்தில் ஸாதிப்பர். நான், எனது என்கிற புத்தி நீங்கினால் நானும் எனதும் ஸர்வேச்வரனுடைமையாம். அவ்வுடைமையாக்குதல்தான் ஆத்மஸமர்ப்பணம். மனதை அடக்கி ஆளும் திறமைதான்.

அததிறமை அடையும வழியைக் காடட "உனனுமின,"
' சோமின" "புலகு," "பற்று," "அடஙகு," "ஒடுஙகு" என்னும்
ஷடபதபரயோகம செயதார இவறறின ஸவாரஸயததை சறறு
ஆராயவோம அறுகால சிறுவணடு சாகா ஸஞசாரியாய மதுவைத
திரடடுமாபபோலே ஆழவாரும சாகோபசாகையான உபநிஷததுக
களின ஸாரததை காஹிதது இவவாறு பதபரயோகம செயதார
எனறு காலகேஷப கோஷ்டியில சில ஸத வருததாகள அனுபவிபபார
கள "உனனுமின" எனபதறகு ஸமரணம எனறு பொருள
ஸமரிதத பிறகு "சோமின" எனறு (ஸஙகம) நெருஙகுதல வேண
டும நெருஙகின பிறகு "புலகு" எனறு பஜனததிலே மூடடுகிறா
பஜிதத வஸதுவில "பறறு" எனறு விடாது கைபபிடிகக வேணடும
எனகிற அதயவஸாயம பிறககும அவவதயவஸாயம பிறநதவாறே
"அடஙகு" எனறு எலலா சேஷவருததிகளையும அவனுககே செயய
வேணடும எனகிறா அபபடிச செயதால "ஒடுஙகு" எனகிற
ஸாயுசசிய பதவி தானே கைகூடும இமமாதிரி படிபபடியாக எம
பெருமானைச சோதலதான ஆதம ஸமாபபணமாகும. பேரரு
ளாளன ஸநநிதியில "உனககே நாமாட செயவோம" எனறு அந
வரதம பரிசாயம பணணிவநத ஓா பெருநதுறவி "உனனுமின, சோ
மின" பரபகதி தசையையும "புலகு, பறறு" பரஞான தசையை
யும "அடஙகு, ஒடுஙகு" பரமபகதி தசையையும காடடும எனறு
நிாவஹிததுபபோருவா இநத தசா விபாகஙகளை "காதல,"
' அனபு," "வேடகை," "அவா" எனறும ஸஙக, காம, அநுராக,
ஸநேஹாதயவஸதாதி நாமஙகளாலே பரபகதி, பரஜஞாந, பரமபகதி
தசைகளாகக காடடுமெனபா

இவவாழவாா பரமகருபையாலே அஸமதாதிகளுககு பரமோப
தேசம பணணினதால "தெளியாத மறைநிலஙகள தெளிகினறோம."
இவா ஆசாாயபதம நிாவஹிககாமலும, கயாதிலாபபூஜாபேகைஷ இல
லாமலும, ஒரு விநிபாதநநிராய இலலாமலும, பிராடடி, பிரஹலா
தாழவான போல "ஞாலததாா பநத புததியும அநாததமுஙகணடு
ஆறறுமையும மிககககிருபையுமிறே" எனறு இவருடைய கிருபை
யின ஆதிகயம சிஷயோகதிஸிததமாயிறறு இவா தான அனுபவிதத
விஷயம கொளள மாளா இனபவெளளமாதலால பெருககெடுதது
ஒனறு பதது நூறு ஆயிரமாகப பல தலைததது "நீா பால நெய
அமுதான ஏரி நெளிககுமாபபோல பரபகதயாதி ஞானமருதாபதி
வாயகரைமிடைநது மொழிபபடடு அவாவில அநதாதி எனப போ

பெற்றது” குளத்துப்படியில் குருவி குடித்துப்போம் வீராணத் தேரி நாடுபாயும் ஆகையால்தான் இவரை நாம் பரமாசார்யனாகக் கொண்டாடுகிறோம்.

பொலிக பொலிக பொலிக

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## பூர்வாசார்ய த்வயாபிமத அஷ்டாதசபேத ஸங்க்ரஹம்.

திருமழிசை கோ. க. அப்பன் ராமானுஜாசாரியரால் பூர்வாசார்ய ஸம்ப்ரதாயத்வய விஷயமான க்ரந்தங்களில், ஸ்ரீ லோகாசார்யர், ஸ்ரீ வேதாந்தாசார்யர் இவர்களுடைய ஸம்ப்ரதாயார்த்த நிர்வாஹ பேதங்கள், ஆராய்ந்தெடுக்கப்பட்டு சுருக்கமாகவும், ஸுஸ்பஷ்டமாகவும் ச்லோகரூபேண எழுதப்பட்டதாய் ‘பூர்வாசார்யத்வயாபிமதாஷ்டாதச பேதஸங்க்ரஹம்’ என்னும் பெயருடன், சில ஆஸ்திகர்களின் ப்ரேரணையின்பேரில் ஸ்ரீமுக ஸு (1934)-ல் மணிப்ரவாள வ்யாக்யானத்துடன் தெலுங்கு லிபியிலும் தமிழ் லிபியிலும் அச்சிடப்பட்டிருக்கிறது. இக்கிரந்தத்தின் விஷயங்களைப் பார்த்ததும், அந்தப் பூர்வாசார்யர்களுடைய ஸம்ப்ரதாயார்த்த தாத்பர்யங்கள் ப்ராமாணிகமாயும், தெளிவாயும் புலன்படும். ஸ்ரீலோகாசார்யர் அருளிச்செய்த அஷ்டாதச ரஹஸ்யக்ரந்தங்களையும் ஸ்ரீ வேதாந்தாசார்யர் அருளிச்செய்த ரஹஸ்யத்ரய ஸாரத்தையும் ஆராய்ந்து பார்க்கவேண்டிய க்லேசம் படவேண்டாம். இக்கிரந்தந்தன்னில், அந்தந்த நிர்வாஹங்களின் பரஸ்பரம் தாரதம்யமாவது, வைஷம்யமாவது ஈஷத்தும் காட்டப்படவில்லை. திவ்ய ப்ரபந்த வ்யாக்யானங்களில் ஸ்ரீ உடையவர், எம்பார், கூரத்தாழ்வான், பட்டர் இவர்களுடைய நிர்வாஹ பேதங்கள் போலவே இந்த நிர்வாஹபேதங்களும் உள்ளன. ‘பிணங்கியமரர் பிதற்றும்’, என்கிறவிடத்தில், விஷயவைலக்ஷண்யாதீனமான பிணக்கம்போலவே, இங்கும் ஸம்ப்ரதாயார்த்த விஷயவைலக்ஷண்யமடியாகப் பிணக்கம் நேர்ந்தால், உபாதேயமாகவே கொள்ளலாம். அல்லாத போதிறே த்யாஜ்யமாகிறது.

கீழ்ச்சொல்லப்பட்ட க்ரந்தத்தை திருமழிசை கோ. க. அப்பன் ராமானுஜாசார்யர் என்கிற விலாசத்திற்கு எழுதிப்பெற்றுக் கொள்ளலாம்.

---

## கோயிலுத்ஸவங்கள்.

மாசி 21௳ ( 4-3-36) தெப்பத்திருநாள் ஸ்ரீரங்கப்ரபை, பந்தக் காக்ஷி, சாற்றுமுறை.

" 28௳ (11-3-36) திருவெள்ளறைத்திருநாள்.

பங்குனி 1௳ (13-3-36) உறையூர் தெப்பத்திருநாள்.

" " திருவெள்ளறைப் பெருமாள் வட திருக் காவேரி தீர்த்தம்.

" 7௳ (19-3-36) ஸர்வைகாதசி, உறையூர் பந்தக்காக்ஷி, திரு வெள்ளறைத்தேர்.

" 14௳ (26-3-36) திருமுளை.

" 15௳ " ஸேனை முதலியார் நகர் சோதனை.

" 16௳ " ப்ரஹ்மோத்ஸவ ஆரம்பம், த்வஜா ரோஹணம்.

" 24௳ " பங்குனி உத்திரம், கோரதம்.

" 25௳ " பூர்ணிமை, ஸப்தாவரணம், சாற்றுமுறை

## திருமலை உத்ஸவம்.

[ஸ்ரீமான் பரிசோதகர் மையூர் பண்டித விஜயராகவாசாரியார்.]

அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கை யுறையும் திருமார்பையுடைய திருவேங்கடமுடையான் "கலியுகத்தில் கண் முன்னே விளங்கும் தெய்வம்" என்று உலகத்தார் கொண்டாட ஆநந்தநிலய விமானத்தில் வீற்றிருந்து பக்த கோடிகளை அநுக்ர ஹித்துவரும் விஷயம் கையிலங்கு நெல்லிக்கனிபோல் அனைவரு மறிந்ததே.

மண்ணுடும் விண்ணுடும் ஆழ்வார்களும் ஆசார்யர்களும் மங்களா சாசநம் செய்யும் ஸ்ரீநிவாசனுடைய வாசஸ்தானமாகிய திருமலை, வ்ருஷகிரி, கருடகிரி, ஸிம்ஹகிரி, க்ருஷ்ணகிரி, அஞ்சனகிரி, வேங் கடகிரி, நாராயணகிரி, அல்லது சேஷகிரி என்கிற ஏழு திருநாமங் களையுடைய பர்வதங்களையும் அனேக புண்ய தீர்த்தங்களையுமுடைய தாய் விளங்கா நிற்கும். இவ்வளவு மஹிமைவாய்ந்த திருமலையில் திருக்கோயில்கொண்ட திருவேங்கடமுடையானுக்கு உத்ஸவாதிகள் சாஸ்த்ரமான ரீதியை அநுஸரித்தே நடைபெறும்.

1936 மார்ச் 23௨ (பங்குனி 11௨) சாந்த்ர ஸம்வத்ஸராதி ஆஸ்தாநம் என்னும் உத்ஸவம் நடைபெறும்.

ஷை தினத்தில் ப்ராத:காலத்தில் பெரிய ஜீயர், ஏகாங்கி, அர்ச்சகாள், ஆசார்ய புருஷர்கள் முதலான கோயில் அதிகாரிகள் அனைவரும் சன்னிதிக்குவந்து ஸுப்ரபாதம் முதலான நித்யாராதனமும் சாற்றுமுறையும் நடந்தபின் முன்மண்டபத்தில் எழுந்தருளி விசேஷச் சிறப்புகள் அமுது செய்து பஞ்சாங்க ச்ரவணாநந்தரம் கோஷ்டி விநியோகமான பிறகு ஆஸ்தாநம் எழுந்தருள்வர். அப்பால் அப்யாகதர்களனைவர்க்கும் தர்மதர்சநம் நடைபெறும். அதே தினத்தில் கீழ்த்திருப்பதியில் கோவிந்தராஜன் ஸன்னிதியிலும் சக்ரவர்த்தித்திருமகன் சன்னிதியிலும் அதே உத்ஸவம் நடைபெறும்.

## காஞ்சீபுரம் உத்ஸவங்கள்.

[ஸ்ரீ. உ. வே. அண்ணங்கராசாரியார்]

தேவப்பெருமாள் ஸந்நிதியில் நாளது பங்குனிமீ 1௨ 7 நாள் பல்லவோத்ஸவம் நடைபெறும். தினப்படி பகல் 11 மணிக்குப் பெருமாள் நூற்றுக்கால் மண்டபத்திற்கு எழுந்தருளிப் பலவித சீதோபசாரங்களுடன் ஸ்தலபுராணம் வாசிக்கக் கேட்டருள்வது, இரவில் திருவீதிப் புறப்பாடு. 19-3-36௨ ச்ரவண நக்ஷத்ரத்தில் முடிவுபெறும்.

ஷை ஸன்னிதியிலேயே 30-3-36௨ முதலாக ஏழுநாள் பங்குனி யுத்திரத்திருநாள் நடைபெறும். இது மலையாள நாச்சியாருடைய திருக்கல்யாணத்திற்காக இந்த திவ்ய தேசத்தில் நடத்தப்படுமுத்ஸவம். 5-4-36௨ ஞாயிற்றுக்கிழமை இவ்வுத்ஸவம் முடிவுபெறும். அன்று திருக்கல்யாண மஹோத்ஸவமும், மறுநாள் கந்தப்பொடி வஸந்த மஹோத்ஸவமும் அன்றிரவு பெரிய திருவீதி புறப்பாடும் மிக அழகானவை.

## ஸ்ரீயதோக்தகாரி ப்ரஹ்மோத்ஸவம்.

ஸ்ரீ காஞ்சீபுரியில் வெஃகா என்கிற திவ்ய தேசத்து எம்பெருமானாகிய சொன்னவண்ணஞ்செய்த பெருமானுக்கு 20-3-36௨ முதலாக ப்ரஹ்மோத்ஸவம் பரமவிலக்ஷணமாக நடைபெறும். நித்தியம் இரண்டு வேளையும் தேவப்பெருமானுடைய மாட்டவீதி

கையும் அலங்கரித்து நடைபெறும் இவ்வுத்ஸவம் அவசியம் பக்தர்களுக்கு ஸேவிக்கவுரியது.

## ஸ்ரீ ராஜமன்னா ஸந்நிதி ப்ரஹ்மோத்ஸவம்.

இந்த திவ்ய தேசத்தில் பதினெட்டு நாள் ப்ரஹ்மோத்ஸவம் நடைபெறுவது வழக்கம் 11-3 36 தேதி முதலாக இது நடைபெறும் இது இரண்டு ப்ரஹ்மோத்ஸவமாகும் முதல் ஒன்பது நாள் ஸாதாரணமான உத்ஸவமாயிருக்கும் பிந்தின ஒன்பது நாள் மிகவும் ஆச்சரியமான மஹோத்ஸவம் பங்குனியீ ரோஹிணீ நக்ஷத்திரத்தில் உவப்ருதம் அந்த மஹோத்ஸவத்தில் வித்வத் ஸபைகள் விசேஷமாக நடந்து கொண்டிருந்தன இடையில் சில வருஷமாக நடைபெறவில்லை இவ்வருஷத்தில் பழையபடி நடைபெறுமாவென்று பலர் எதிர்பார்க்கிறார்கள்

## திருவல்லிக்கேணி யுத்ஸவங்கள்.

இத்தலத்தில் ஸ்ரீ பார்த்தஸாரதிப் பெருமாளுடைய திவ்ய விமானத்தில் சில திருப்பணிகள் நடக்கவேண்டியதற்காக, சென்ற தை மாதத்தில் பாலாலய ப்ரதிஷ்டை நடந்திருப்பதால் சில மாதங்களுக்கு ஸ்ரீ பார்த்தஸாரதியின் ஸகல உத்ஸவங்களும் நிறுத்தப்பட்டிருக்கின்றன அழகிய சிங்கருடைய உத்ஸவங்கள் மாத்திரமே நடைபெறுகின்றன நான்து சித்திரை மாதத்தில் ஸ்ரீ பார்த்தஸாரதி ப்ரஹ்மோத்ஸவம் நடைபெறுவது அருமையே. மஹா ஸம்ப்ரோக்ஷணம் முடிந்தபிறகு ஷை ப்ரஹ்மோத்ஸவம் நடைபெறும். ஷை ஸந்நிதியின் தர்மகர்த்தாக்களில் ஒருவரான ம-ா-ா-ஸ்ரீ வேமூர (ராவ் பஹதூர்) ரங்கநாதம் செட்டியாரவர்களின் பெருமுயற்சியினால் ஷை திருப்பணி விரைவாகவே நடந்து வருகிறது

## ஸ்ரீவில்லிபுத்தூர்

[ஸ்ரீ வைஷ்ணவதாஸ பாத்தூளி]

இந்த க்ஷேத்ரத்தில் ஆண்டாளவதரித்த திருப்பூர மண்டபத்தில் சுமார் 2, 3, வருஷங்களாக தி கிடாம்பி தேயவசிகாமணி அய்யங்கார் ஸ்வாமிகளால் ப்ரதிதினம் காலக்ஷேபம் நடந்துவருகிறது திருப்பல்லாண்டு முதலாக முதலாயிரம் முடிந்து திரு-

## ஸ்ரீமான் ஊரா ஸ்ரீராமுலு செட்டியார்.

ஸ்ரீமான் ஊரா சுப்பய்ய செட்டியார் என்ற மஹாநுபாவர் இச்சென்னை மாநகரில் பகவத்பாகவத ஆசார்ய கைங்கர்ய நிரதராய் சென்னை வரதா முத்தியப்பன் தெருவிலிருக்கும் ஸ்ரீ உடையவர் சன்னிதிக்கு தர்மகர்த்தாவாயிருந்து விசேஷமான திருப்பணி முதலான கைங்கர்யங்களைச் செய்து பாதமூலம் கமிஷ்யாமி யாநஹம் பர்யசாரிஷம் என்கிறபடி அடியார் நிலை நின்று வைகுந்தம் சென்றிருக்கிறார். அம்மஹாநுபாவரின் ஸத்புத்ரரான ஸ்ரீமான் ஊரா ஸ்ரீராமுலு செட்டியாரவர்களும் தூணாத்பரதோபம் என்கிறபடி அவரைப்போலவே ஆத்ம குணங்களால் •அலங்கரிக்கப்பட்டவராய் பகவத்பாகவத ஆசார்ய கைங்கர்ய துரந்தரராய் ஷை உடையவர் சன்னிதிக்கு தர்மகர்த்தாவாய் கோபுரமண்டப திருத்தேர் முதலான விசேஷ கைங்கர்யங்களைச் செய்துகொண்டு வருகிறார். இவர் பல்லாண்டு பல்லாண்டாக இக்கைங்கர்யங்களைச் செய்துகொண்டு இருக்கும்படி எல்லாம்வல்ல இறைவன் இன்னருள் புரிவாராக. இம் மஹாநுபாவர் நமது வைஜயந்தீ பத்ரிகைக்கு ஸஞ்சிகைதோறும் ஒரு ரீம் காகிதம் வாங்கிக்கொடுப்பதாக வாக்களித்து அவ்வாறே இந்த மாசிப்புனர்பூச பத்ரிகைக்கு ஒரு ரீம் காகிதம் வாங்கிக்கொள்ளும்படி ரூபா 3—4-0 கொடுத்துபகரித்தார். இதேமாதிரி ஸ்ரீ ராமானுஜ ஸித்தாந்தத்தில் அபிநிவேசமுடைய ஆரிய பரபுக்கள் யதோசிதம் பொருளுதவிசெய்து இப்பத்ரிகை சாஸ்வதமாய் நடைபெறுமாறு அநுக்ரஹிக்க வேண்டும்.

இங்ஙனம் V இராமாநுஜாசாரியார்
பத்ராதிபர்

---



ஸ்ரீ

# ராமாநுஜ ஸித்தாந்த வைஜயந்தி

மாதந்தோறும் வெளிவரும் ஸத்ஸம்ப்ரதாயார்த்த ப்ரகாசப் பத்ரிகை

| தொகுதி 1 | பத்ராதிபர் வடகரை இராமாநுஜாசாரியார் | பகுதி 5 |
|---|---|---|

ஸ்ரீ:

ஸ்ரீ ஹயக்ரீவாய நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

தஸ்மை ராமாநுஜார்யாய நம: பரமயோகிநே |
ய: ஶ்ருதிஸ்ம்ருதிஸூத்ராணாம் அந்தர்ஜ்வரமஶீஶமத் ||

தஸ்மை ராமாநுஜார்யாய நம பரமயோகிநே |
ய: ஶ்ருதிஸ்மருதிஸூத்ராணாம அந்தாஜ்வரமஶீஶமத ||

வேதவேதாந்த வேதாங்க ஸத்தத்த்வார்த்த ப்ரவர்ஷிணீ |
ஸ்ரீராமாநுஜஸித்தாந்த வைஜயந்தீ விஜ்ரும்பதாம் ||

வேத வேதாந்த வேதாங்க ஸத்தத்வார்த்தவாஷிணீ |
ஸ்ரீராமாநுஜஸித்தாந்த வைஜயந்தீ விஜ்ரும்பதாம |



## பங்குனி உத்திரம்

[ப்ரதிவாதி பயங்கரம் ஸ்ரீ உ வே அண்ணங்கராசாரியார்]

நமது வைஜயந்தியின் ஐந்தாவது ஸஞ்சிகை இன்று வெளி வருகின்றமையால் இன்றைத்தினத்தின் பெருமையையும் சிறிது நாம் அநுபவிக்கப் ப்ராப்தமாகின்றது பங்குனி யுத்திரமென்னுமிந் நாள் பெரும்பாலும் புவனமெங்கும் கொண்டாடப்படுவதாகும்,

இது பெரிய பிராட்டியாருடைய திருநக்ஷத்திரமென்று பெரியோர்களால் போற்றப்படுகின்றது. இதற்குச் சில விமர்சங்கள் செய்ய நேர்ந்திருக்கறதால் அது செய்வோம்.

இது நம்மாழ்வாருடைய திருநக்ஷத்திரமென்றும், இது திருமங்கையாழ்வாருடைய திருநக்ஷத்திரமென்றும் இங்ஙனே ஓரோர் திருநக்ஷத்திரத்தை ஒவ்வொரு மஹநீயருடைய திருநாளாக நாம் வழங்கி வருவதானது இந்நிலவுலகில் அவரவர்கள் திருவவதாரஞ் செய்தருளின நாளென்பது பற்றியே யாம். எம்பெருமானும் ஸ்ரீராம க்ருஷ்ணாதி ரூபேண திருவவதாரஞ் செய்தருளின காலத்து இருந்த நக்ஷத்திரத்தையிட்டு ஸ்ரீராமபிரானுடைய திருநக்ஷத்திரம் புநர்வஸு என்றும், கண்ணபிரானுடைய நக்ஷத்திரம் ரோஹிணியென்றும் ஸ்ரீந்ருஸிம்ஹமூர்த்தியின் நக்ஷத்திரம் ஸ்வாதியென்றும் இப்புடைகளிலே வழங்கி வருகிறோம்.

கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலிய அர்ச்சாவதாரத் திருப்பதிகளில் ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு திருநக்ஷத்திரத்தை எம்பெருமானுடையதாகக் கொண்டாடக் கண்டு வருகிறோம். திருவேங்கடமுடையானுக்குத் திருவோணமென்றும், அழகிய மணவாளனுக்கு ரேவதியென்றும், பேரருளாளனுக்கு ஹஸ்தமென்றும் இங்ஙனே வழங்கி வருவதானது அந்தந்தத் திருப்பதியெம்பெருமான்கள் அந்தந்தத் திருநக்ஷத்திரங்களில் திவ்ய மங்கள விக்ரஹ பரிக்ரஹம் பண்ணியருளினார்களென்பதை நிமித்தமாகக் கொண்டது என்று பெரியோர்கள் அருளிச்செய்யக் கேட்டிருக்கை.

நித்யஸூரிகளாகிய ஸேநை முதலியார், பெரிய திருவடி, திருவாழி யாழ்வான் முதலானோர்க்குப் பூராடம், சித்திரை, ஸ்வாதி முதலிய திருநக்ஷத்திரங்கள் திருவவதார நாட்களாக வழங்கப்பட்டு வருகின்றனவே, இதற்கு என்ன நிதானம்? இந்தத் திருநக்ஷத்திரங்கள் ஸகல திவ்ய தேசங்களிலும் ஒரே விதமாகவே கொண்டாடப்பட்டு வரக் காண்கையாலே, ஸ்ரீராம க்ருஷ்ணாதிகள் விபவாவதாரஞ் செய்தருளி ஒவ்வொரு திருநக்ஷத்திரத்தைப் பெற்றதுபோல ஸேநை முதலியார் முதலான ஸூரிகளும் ஏதேனும் விபவாவதாரம் செய்தருளி ஒவ்வொரு திருநக்ஷத்திரத்தைப் பெற்றார்களோ? என்று சிலர் கேட்க நேருகின்றது. இவ்வண்ணமே பங்குனியுத்திரம் பெரிய பிராட்டியார் திருநக்ஷத்திரமென்றால் ஸ்ரீமஹாலக்ஷ்மியின் எந்த அவதாரத்தைப்பற்றி இந்த வ்யவஹாரம் நிகழ்ந்தது?

(𑌦𑍇𑌵𑌤𑍍𑌵𑍇 𑌦𑍇𑌵𑌦𑍇𑌹𑍇𑌯𑌂 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌤𑍍𑌵𑍇 𑌚 𑌮𑌾𑌨𑍁𑌷𑍀, 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑍍𑌦𑍇𑌹𑌾𑌨𑍁𑌰𑍂𑌪𑌾𑌂 𑌵𑍈 𑌕𑌰𑍋𑌤𑍍𑌯𑍇𑌷𑌾𑌤𑍍𑌮𑌨𑌸𑍍𑌤𑌨𑍁𑌮𑍍) தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ, விஷ்ணோர் தேஹாநுரூபாம் வை கரோத்யேஷாத்மநஸ் தநும்” என்று ஸ்ரீ பராசரபகவான் பேசினபடியே ஸ்ரீ மஹாலக்ஷ்மியும் ஸீதை யென்றும் ருக்மிணி யென்றும் பலபல திருநாமங்களோடே செய்தருளியிருக்கும் விபவாவதாரங்களில் எந்த அவதாரத்தில் பங்குனி யுத்திரம் திருநாளாக வாய்த்தது” என்றும் பலர் கேட்க நேருகின்றது.

இவ் விஷயத்தில் பெரியோர்கள் ஊஹமாக அருளிச் செய்யும் சில வார்த்தைகளை இங்கு விஞ்ஞாபிக்கிறேன். எம்பெருமான் அர்ச்சாவதாரங்களில் ஒவ்வொரு தலத்தில் ஒவ்வொரு திருநக்ஷத்திரத்தைப் பெற்றிருந்தாலும், பொதுவாக எம்பெருமானுடைய திருநக்ஷத்திரம் திருவோணமென்று ஒரு ப்ரஸித்தியுள்ளது. நரஸிம்ஹாவதாரம் ஸ்வாதியில் என்று ப்ரஸித்தமாயிருக்கவும் “திருவோணத் திருவிழவில் அந்தியம்போதில் அரியுருவாகி” என்று பெரியாழ்வார் அருளிச் செய்யக் காண்கிறோம். கண்ணபிரான் ரோஹிணியில் திருவவதரித்தானென்பது ப்ரஸித்தமாயிருக்கவும் “நீ பிறந்த திருவோணம் இன்று நீ நீராடவேண்டும்” என்றும் “திண்ணார் வெண் சங்குடையாய் திருநாள் திருவோண மின்றேழுநாள்” என்றும் யசோதை கூறுவதாகப் பெரியாழ்வார் பணிக்கக் காண்கிறோம்.

நீ பிறந்த திருவோண மென்றவிடத்து வியாக்யானத்தில் மணவாள மாமுனிகள் அருளிச்செய்வதாவது—“இது தான் வைஷ்ணவ நக்ஷத்ர மாகையாலும் அவதாராந்தரங்களிலே இந்த நக்ஷத்ராந்வய முண்டாகக் கூடுகையாலும் தாம் ஐக்யத்தைப் பற்றச் சொல்லுகிறது” என்று வேதத்திலும் 𑌶𑍍𑌰𑍋𑌣𑌾 𑌨𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍍𑌦𑍇𑌵𑌤𑌾 ச்ரோணா நக்ஷத்ரம் விஷ்ணுர் தேவதா” என்று ஓதப்பட்டிருக்கிறது. திருவோணம் ஸ்ரீமஹாவிஷ்ணுவை தேவதையாகக் கொண்ட நக்ஷத்ரமென்பது பொருள். வேதமானது எந்தக் காரணத்தைக் கொண்டு திருவோணத்தை விஷ்ணு நக்ஷத்திரமாக ஓதிற்று என்பதைப் பற்றி நாம் ஆராய்ச்சி செய்யத் தேவையில்லை. காரணம் இருக்கவுமாம், இல்லையாகவுமாம்; விஷ்ணுவுக்குத் திருவோணம் நக்ஷத்திரமென்று வேதபுருஷன் ஓதியிருக்கிறானென்று நாம் கொள்வோம்.

நநா—‘சித்திரகூடத்தில் பரதாழ்வான் செய்த காரியம் வேறு தான்; கடற்கரையில் பெருமாள் செய்த காரியம் வேறுதான். வால்மீகியின் உக்தியில் இது விளங்காநின்றது. * யாவநெ நவூவஸீஒதி* என்றும் * யாவநவூதியாவஸ்ஹதி * என்றும் பரதன் சொன்னப் போலே வசநவ்யக்தி கடற்கரையில் இல்லை’ என்று சொல்ல வருவரேல், தஜீஒஂ வாஉஙஂ வஉஃ. அந்த வார்த்தை இருக்கவுமாம், இல்லையாகவுமாம். அநுஷ்டாநோபக்ரமத்தில் அந்த நிலைவு எவர்க்கும் இருந்தே தீரும். வாவஂவ, பரதன் செய்தது ப்ராயோபவேசமென்று தீர்மானித்தெழுதிய இப்பண்டிதர்க்குப் பெருமாள் செய்ததும் ப்ராயோபவேசந்தானென்று இசைந்தே தீரவேண்டியதாய் விட்டபடியால் * அத்யமேச்லோகத்திற்கு ஆசார்யர்கள் வெளியிட்டிருக்கும் அர்த்தமே இவர்க்கும் தஞ்சமாய் வந்து முடிந்ததென்று தேறிவிட்டது. தத்வப்ரதிஷ்டையில்: 60+64 பாராக்கள் பார்க்க

மேலும் இப்பண்டிதர் எழுதியிருக்கிற விநோதத்தை நோக்குங்கள்; “ஸஒஹ ஜெவாஉஙணாடி ஸஙய தாஙணாடி என்று ஒரு கல்பம்; ஸாமாஙஸஹவாஉஙணாஂ ஸஙய தாஙணாஂ என்று ஒரு கல்பம்; ஜெவா இரண்டிலொன்று; ஸாமாஙஸஹவா இரண்டிலொன்று. இப்படிக்கும் அந்வயம் கொள்ளலாம்” என்று முடிவில் எழுதுகிறார். இரண்டாவது வாக்கியத்தில் (ஜெ) என்பதைக் கூட்டாமல் (ஸாமாஙஸஹவா உஙணா உய தாஙணாடி) என்று ஒரு கல்பம்—என்கிறவிவருடைய விவக்ஷிதத்தை எம்பெருமான்தான் அறியவேணும். மரணதரணங்கள் ஸாகரத்திற்கே எப்படி ஸம்பவிக்கும். ஸாமாஙகதக்ஷக தாஙணா மல்லது வேறொன்றை இவர் இங்கு விவக்ஷிக்க முடியாதே. கடல் எந்த வஸ்துவைக் கடக்கவேணுமோ அறியோம். தரணமென்பதற்கு க்ஷேமமென்று அர்த்தமென்று இவர் எழுதுவதும் பிசகு. இந்த அஸம்பத்த பாஷிதம் கிடக்கட்டும். * ஸஒஹஜெவா உஙணாடி ஸஙய தாஙணாடி * என்று இவர் எழுதுகிறார் இதனால், பெருமாள் தம்முடைய முடிவைக் கூறுவதான ஒரு பக்ஷத்தையும் தாம் அங்கீகரிப்பதாக நன்கு காட்டுகிறார். ஸாமாஙஸஹ உஙணா மென்பதும் அந்தப் பக்ஷத்திலேயே உண்டு—என்று

இவர் எழுதினாலும் ஸாத்ய ஶரண மென்கிற விஶத பக்ஷத்தை இவர் அங்கீகரித்துவிட்டதாக விளங்கிவிட்டது. "வ்ருக்ஷஸ்யாக்ரே நிஷண்ணஸ்து வ்ருக்ஷச்சேதம் விசிந்தயேத்" என்றதுதான் இங்கு நினைவுக்கு வருகிறது. 'கடலுக்கே பரணமாகக் கொள்ளாமல் பெருமாளுக்கு பரணமாகக் கொண்டால் மஹா தோஷம்' என்று ஸாதிக்கத் தொடங்கினவிவர் ஶரணமென்று அந்வயிக்கிற பக்ஷமும் கொள்ளத்தக்கதுதான் என்று ஸ்வஹஸ்தம் எழுதுவது என்னே! ஸாமாந்ய ஶரண் மென்று சொல்லக்கூடாதென்று ஆஞ்ஜநேயஸ்வாமி யெழுதியிருப்பதை மறுப்பதில் மாத்திரம் எனக்கு நோக்கேயல்லது ஶரண் மென்று யோஜிக்கக்கூடா தென்பதில் எனக்கு நோக்கில்லை' என்றே இனியிவர் சொல்லித் தீர வேண்டும். அப்படியானாலும், ஶரண மென்று யோஜிக்குமளவில் மஹத்தான அநர்த்தம் வந்துவிடும் என்று இவர் முதலிலெடுத்து எழுதின தெல்லாம் பாழ்தானே. ஶரண் மென்றாலும் அது பெருமாளுடைய விநயப்பேச்சு என்றும், ஸமுத்ரத்தின் பரணத்தில்தான் அதுவும் பர்யவஸிக்கு மென்றும் இப்பண்டிதர் எழுதுகிறார். ஶரண மென்று யோஜித்துவிட்டு அதன் தாத்பர்யத்தை இவர் எங்ஙனே இழுத்துக்கொண்டு போனாலும் அதில் நமக்கு விப்ரதிபத்தியில்லை. அந்வயக்ரமத்தில் விவாதமே யொழியத் தாத்பர்யத்தில் விவாதமே யில்லை. இவர் எழுதுகிற தாத்பர்யத்திற்கு மேற்பட்ட பல தாத்பர்யங்களை ஆஞ்ஜநேயஸ்வாமி எழுதியே யிருக்கிறார். * ஊர்த்வம் மாஸாந் ந ஜீவிஷ்யே * என்ற பிராட்டியின் வார்த்தையைத் திருவடி சொல்லக் கேட்ட பெருமாள் உடனே * ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம் * என்றார். இதற்கு என்ன அர்த்தம்? இனி ஒரு நொடிப்பொழுதும் பிழைத்திராமல் இப்போதே நான் முடிந்துவிடுவேன் என்பதுதானே இதற்கு அர்த்தம். அப்படி முடிந்துவிட்டாரோ? இல்லை. அதற்கு அது தாத்பர்யமன்று என்னவேணும். இப்படி தாத்பர்ய நிர்வாஹம் பண்ணி ஒழுங்கு படுத்தவேண்டிய பெருமாள் வார்த்தைகள் பலவுண்டு. ஸக்ருச்சரண மென்றதுவும் அப்படியேயாகிறது. பெருமாள் முடிவதாகக் காட்டுகிற அந்வயம் ஆபத்துக்கிடம் என்று ஆக்ரஹம் கொண்டவிவர் அந்தோ! அந்த ஆபத்துக் குழியிலேயே தாமும் ஏன் விழுகிறார்? என்பதே இங்கு நாம் கேட்பது.

**ஸாகரஶரண** மென்று மிகவும் தவறான ஒரு அர்த்தத்தையும் கூடக் கூட எழுதிவருமிவர் இராமபிரானை தூஷிக்க வந்தவராமத்தனை. ஸ்ரீராம குணங்களுக்கு வேறுநிந்தை வேண்டா.

'பெருமாள் அநுஷ்டித்தது **அவிகலஶரணாகதி**யன்று' என்று எழுதாநின்றவிவர் **விகலஶ** ரணாகதி யென்று ஒப்புக் கொண்டாராகிறார். சில அங்கங்கள் தவிர்ந்து சில அங்கங்களோடே கூடின சரணாகதி யென்கிறாரே; தவிர்ந்த அங்கங்கள் போகட்டும்; இசைந்த அங்கங்கள் எவை? ஏதேனுமொன்றை ஒப்புக்கொண்டாலும் ஸாகரஸ்ய ஶரணமென்பதை நெஞ்சால் நினைக்கவும் வழியில்லையே. *ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநமித்யாதிகளில் எந்த அம்ஶம் பெருமாளிடத்திலிருந்தது? பெருமாள் குணபூர்த்தி யில்லாதவன் திறத்தில் சரணாகதி செய்தாராகையாலே அது பலிக்கவில்லை என்று ஆசாரியர்கள் ஸாதித்தார்களே யல்லது ஆநுகூல்ய ஸங்கல்பத்திற்கு எதிராக ப்ராதிகூல்ய ஸங்கல்பம் செய்து கொண்டாராதலால் பலிக்கவில்லை? யென்று ஒரு ஆசார்யரும் ஸாதித்திருக்கவில்லை ஸாகரஶ ரணமென்கிற அர்த்தம் ஆசார்ய கோஷ்டியில் ப்ரஸித்தமாகில் அதைக்கொண்டு எவ்வளவோ சாஸ்த்ரார்த்தங்கள் அவச்யம் சிக்ஷிக்கப்பட்டிருக்குமே. இதுநிற்க.

பெருமாள் பக்கலில் ஸர்வேஶ்வரபாவம் கழற்ற வொண்ணாததாயினும், இருக்குமிடம் தெரியாதபடி அதனை மறைத்து மநுஷ்யத்வத்தையே பெருமாள் பெரும்பாலும் காட்டிவருகிறார் என்பது ஸ்ரீராமாயணத்தில் ஆழ்ந்த அவகாஹநமுடையாருடைய ஸித்தாந்தம். ஆகவே அந்த மநுஷ்யத்வத்திற்கு மிகவும் சேரக் கடலரசனை த்ரிகரண சுத்தியோடு வேண்டிக்கொண்டு அக்கரை செல்ல நினைத்துக் கரையிலே தரைக்கிடை கிடந்த பெருமாள் அந்த ஸமயத்திலே ருஜுவாக நெஞ்சால் நினைப்பதோ வாயாற் சொல்லுவதோ எப்படியிருக்க வேண்டு மென்பதை நாம் விவரிக்க வேண்டுமோ? 'தண்ணீர்த் தெய்வமே! நீ வழிவிட்டாலொழிய எனக்கு வேறு கதியில்லை; இப்போது உன் தயவை எதிர்பார்க்க வேண்டியதாக நேர்ந்துவிட்டது; நீ தயவு செய்து வழிவிட்டால் தான் நான் ஸபரிவாரனாய் அக்கரை சென்று எதிரிகளை முடித்துப் பிராட்டியை லபித்து வாழலாகும்; இல்லையேல் இங்கேயே முடியவேண்டியதாகுமத்தனை' என்று இங்ஙனே அநுஸந்

திப்பதன்றோ ப்ராப்தம். 'வழிவிடுகிறாயா? அல்லது உன்னைத்தொலைத்துவிடட்டுமா?' என்று உபக்ரமத்திலேயே உரைப்பதானது வணங்குகிறவனுடைய காரியமாகுமோ? காட்டிலே வழிபறிக்கவருங் கள்ளர்கள் கத்தியைக் காட்டி 'உடைமைகளைக் கொடுக்கிறாயா? உயிரை வாங்கிவிடட்டுமா?' என்று சொல்வது உண்டு அந்த நிலைமையிலா பெருமாளை வைத்துப் பேசுகிறதென்று விவேகிப்பாரில்லையே!

கடன் வாங்கிக்கொண்டு போனவர்களிடமிருந்து கடனை மீட்டுக்கொள்ள நினைப்பவர்கள் 'தயவு செய்து கடனைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும்' என்று வணங்கிக் கேட்பது ஒரு ஸமயம்; 'கொடுக்கிறீரா? அல்லது, சிறையில் புகுந்து பரிபவப்படுவீரான வளவு முயற்சியை யெடுத்துக் கொள்ளட்டுமா?' என்று வெருட்டிக் கேட்பது ஒருஸமயம். இங்ஙனே வெருட்டிக் கேட்கிற வார்த்தையே முதலடியில் வெளிவந்துவிட்டால் அதற்கு, வணங்கிக் கேட்கிற ஸமயமென்று பேருண்டோ? இந்த மிகச்சிறு விஷயத்தைக் கூட நெஞ்சில் வாங்கிக் கொள்ளாமல் வாது செய்பவரோடு எதிர்வாது புரிவது ஸத்யமாய் நமக்கு வெட்கமாகவே யிருக்கிறது.

ஒருவரிடத்தில் நாம் பணம் கொடுக்கும்போது இதை நாம் மறுபடியும் திருப்பிப் பெற்றுக் கொள்வது எங்ஙனே என்று ஒவ்வொருவரும் ஆலோசிப்பதுண்டு, அப்போது மூன்று விதமாய் மனத்தை ஸமாதானப்படுத்திக் கொள்வர்கள்; (அதாவது) அப்பா! தாயே! என்று வேண்டிக்கொண்டு காலைக் கையைப் பிடித்து அந்த வழியிலாவது வாங்கிவிடுவோம்; அவ்வளவுக்கு அவகாசமில்லாதபடி அவனே எளிதாய்க் கொடுக்கவாவது பெற்றுவிடுவோம்; இல்லையேல் நமக்குள்ள உரிமையைக் கொண்டு நியாயாலயத்தில் பிடித்திழுத்து பலாத்காரத்தாலே பெற்றுக் கொள்வோம்—என்கிற இம்மூன்று வழிகளையும் முதலிலேயே தீர்மானித்துக் கொள்வர்கள் அதுபோலவே பெருமாளும் விபீஷணன் தம்பக்கலில்வந்து சேருவதற்கு மிகமுன்னமேயே திருவடியை நோக்கி "தவஸா ஸேது பந்தேந ஸாகரோச்சோஷணேந வா । ஸர்வதா ஸுக்ருதீ ஸாகரஸ்ய ஸம்பதே ॥" என்று மூன்றுவகையான உபாயங்களையும் சிந்தையிற் கொண்டு வெளிப்படவு மருளிச் செய்து, கடலைக் கடத்தல் எவ்வகையிலும் தமக்கு எளிதே யென்பதை வெளியிட்டருளினர்.

அதற்குப் பிறகு விபீஷணாழ்வான் வந்து சேர்ந்தான். அவனை நோக்கி ஸுக்ரீவ மஹாராஜரும் திருவடியும் “கதம் ஸாகரமக்ஷோப்யம் தராம வருணாலயம் | ஸைந்யை: பரிவ்ருதா: ஸர்வே வாநராணாம் மஹௌஜஸாம் || உபாயம் நாதிகச்சாமோ யதா நதநதீபதிம் | தராம தரஸா ஸர்வே ஸஸைந்யா வருணாலயம் ||” என்று கடலைக் கடக்கும் வழி யாதோ வென்று கேட்டார்கள். அதற்கு விபீஷணன் சொன்ன பதிலாவது—‘ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்துமர்ஹதி | கானித: ஸகரேணாயமப்ரமேயோ மஹோததி: || கர்துமர்ஹதி ராமஸ்ய ஜ்ஞாத்வா கார்யம் மஹோததி:” என்பதாம். ரகுகுலத்திற்கு ஸாகரம் மிகவும் உபகாரகமாக அவதரித்ததாகையால் இது மிகவும் பெருமையுடையது, (மநுஷ்ய பாவனையிலே நிற்கிற) பெருமாளுக்கும் இக்கடல் பரமபூஜ்யமானது, ஆதலால் இதனை வணங்கி வழிபட்டு வழி கேட்பது யுக்தமென்று எனக்குத் தோன்றுகிறது, இதைப் பெருமாள் ஸந்நிதியிலும் விஜ்ஞாபித்துத் திருவுள்ளமானபடி செய்வது—என்றார் விபீஷணாழ்வான்.

“ஏவம் விபீஷணேனோக்தோ ராக்ஷஸேந விபஸ்சிதா | ஆஜகாமாத ஸுக்ரீவோ யத்ர ராம: ஸலக்ஷ்மண: || ததஸ்த்வாக்யாதுமாரேபே விபீஷணவசோ ஹிதம் | ஸுக்ரீவோ விபுலக்ரீவ: ஸாகரஸ்யோபவேசநம் ||”—விபீஷணன் வெளியிட்ட அபிப்ராயத்தை உடனே ஸுக்ரீவ மஹாராஜா பெருமாள் ஸந்நிதியிலே போந்து விண்ணப்பித்தார். [ப்ரக்ருத்யா தர்மசீலஸ்ய ராகவஸ்யாப்யரோசத] இயற்கையாகவே ருஜு மார்க்கத்திலேயே செல்பவரான பெருமாளுக்கும் ஸமுத்ரராஜனை வணங்கி வேண்டிக்கொள்வதென்கிற அந்த விஷயம் திருவுள்ளத்திற்குப் பாங்காகப் பட்டது.

உடனே பெருமாள் இளைய பெருமாளையும் மஹாராஜரையும் நோக்கி, ஸமயத்தில் நல்ல வுபாயத்தை நினைப்பூட்டின விபீடணனுக்கு உரிய வெகுமதி யளிக்குமாறு நியமித்துவிட்டு, விபீஷணஸ்ய மந்த்ரோऽயம் மம லக்ஷ்மண ரோசதே | ப்ரூஹி த்வம்

ஸஹஸுக்ரீவஸ்த்வாபி யதிரோசதே ॥] லக்ஷ்மணா! விபீஷணன் தெரிவித்த விஷயம் எனக்கு மிகவும் யுக்தமாகத் தோன்றுகிறது. நீயும் ஸுக்ரீவனும் நன்கு ஆலோசித்துப்பார்த்து இதில் உங்களுடைய அபிமதியையும் தெரிவிக்கவேணும்—என்றார். அது கேட்ட ஸுக்ரீவ லக்ஷ்மணர்கள் [கிமர்த்தம் நோ நரவ்யாக்ர! நரோசிஷ்யதி ராகவ। விபீஷணேந யச்சோக்தம் அஸ்மிந் காலே ஸுகாவஹம் ॥...விபீஷணஸ்ய மந்த்ரஸ்ய யதார்த்தம் க்ரியதாம் வச:।] பெருமாளே! எங்களுடைய அபிமதியைத் தனியே தெரிவிக்கவேண்டியதென்னவிருக்கிறது? இந்த ஸமயத்திற்கு இணங்கிய உபாயத்தையே விபீஷணன் கூறியிருக்கின்றாராதலால் அதுவே எங்களுக்கும் ருசிக்கின்றது; அப்படியே செய்தருளவேண்டியதுதான் என்றார்கள். [ஸ தத்ர குசாஸ்தீர்ணே தீரே நதநதீபதே:। ஸம்விவேச ததா ராமோ வேத்யாமிவ ஹுதாசந:॥] பிறகு பெருமாள் கடற்கரையிலே தர்ப்பங்களைப் பரப்பி நீறுபூத்த நெருப்புப்போலே சயனித்தருளினார். (இவ்வளவோடு பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.) மேல் இருபதாவது ஸர்க்கத்தில், சார்த்தூலனென்கிற வொரு ராக்ஷஸன் சாரணாக இங்குவந்து மீண்டதும், மறுபடியும் சுகனென்கிற ஒரு ராக்ஷஸன் ராவணனது கட்டளையினால் இங்குவந்து பரிபவப்பட்டுப் போனதுமான சில கதைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. மேல் இருபத்தோராவது ஸர்க்கத்தில் (பத்தொன்பதாவது ஸர்க்கத்தின் முடிவிலுள்ள கதையின் தொடர்ச்சியாக) * தத: ஸாகரவேலாயாம் தர்ப்பாநாஸ்தீர்ய ராகவ:। அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிசிச்யே மஹோததே: * என்று தொடங்கி * ஸ த்ரிராத்ரோஷிதஸ்தத்ர நயஜ்ஞோ தர்மவத்ஸல:। உபாஸத ததா ராமஸ் ஸாகரம் ஸரிதாம்பதிம் ॥* என்னுமளவாகப் பதினொரு ச்லோகங்களினால் பெருமாளுடைய தரைக்கிடை பேசப்பட்டது. இந்த இடத்தில்தான் * சுத்ரௌ சரண்யம் சரணம் ஸ ராம ஸாகரஸ்ய * என்பது எட்டாவது ச்லோகமாக வுள்ளது. பன்னிரண்டு ச்லோகங்களுக்குமேல் பெருமாளுடைய கோபாவேசமும் அதனால் விளையும் காரியமும் பேசப்படுகின்றன. அந்த ப்ரகரணம் வேறு, கீழுள்ள ப்ரகரணம் வேறு. வணங்கி வழிபட்டுக் கிடந்த

ஸமயத்திலே பெருமாளுடைய திருவுள்ளம் எங்ஙனே யிருக்கக் கூடியது? எங்ஙனே யிருந்தது? என்பது மாத்திரம் ஆராயப்பாற் தம் * ஸுக்ருத்³ பா⁴வேந * என்றும், * நயஜ்ஞேய: ப⁴வது: * என்றும் இந்த ப்ரகரணத்திலேயே உள்ள சப்தங் களையும் அவற்றுக்குப் பெரியார் வியாக்கியானம் செய்கின்ற அர்த் தத்தையும், அடுத்த படியாகப் பெருமாள் தாமே ஸாதிக்கிற * ஸக்ருதே³வ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே। அப⁴யம் ஸர்வபூ⁴தேப்⁴யோ த³தா³ம்யேதத் வ்ரதம் மம ॥ * என்கிற வார்த்தையையும் விமர்சித்தால், கரணத்ரய நியமாநுவி தராய் வணங்கிக்கிடந்த காலத்திலே கடலரசனை முடிப்ப தான வொரு திருவுள்ளமும் பெருமாளுக்கு உடனிருந்தது என்று சொல்வது எங்ஙனே பொருந்தும்?

விபீஷணன் வந்து சேர்வதற்கு முன்னே பொதுப்படையாகப் பெருமாள் கூறியிருந்த * தவஸா ஸேதுப³ந்தே⁴ந ஸாக³ரோச்சோஷணேந வா। ஸர்வதா² ஸுஸம்பந்நோ ஸாக³ரஸ்யாஸ்ய லங்க⁴நம் ॥ * என்கிற வார்த்தை உபாய விசேஷ நிர்த் தாரண மின்றிக்கே ' இங்ஙனே எனக்கு ஸாத்யமான பல வுபாயங்க ளுண்டு ' என்பதை மாத்திரம் ஸ்ரோத்ருவர்க்கத்துக்கு வ்யக்த மாகத் தெரிவிக்கப் பிறந்ததாதலால், பிறகு ஆப்த வசனங்க ளாலே சரணாகதியாகிற உபாய விசேஷம் கைக்கொள்ளப்பட்டு அதனை ஸநியமமாக அநுஷ்டிக்கப்புகுந்த காலத்திலே ஸாகரோச் சோஷண நினைவையும் கூடவே வைத்து அர்த்தம் பண்ணுவதற்கு அந்த வார்த்தை இடம் தரவேமாட்டாது. அந்த வார்த்தையின் உண்மையான பொருளும் மேலே இனிது விளங்கும்.

ஒரு க்ரந்தத்தைத் தானே பார்த்துப் பரிச்ரமப்பட்டுப் பொருள் தெரிந்துகொள்ள வல்லமை வாய்ந்த வொருவன் ஆப்த வசநாதிகளாலே ஒரு ஆசார்யரிடம் சென்று அவரிடத்திலே அதிக ரித்து க்ரஹிப்பதாக நிச்சயித்துச் சென்று வணங்கும்போது ' நீர் சொல்லுகிறீரா? நானே புஸ்தகம் பார்த்துத் தெரிந்து கொள் ளட்டுமா? என்று வெருட்டிச் சொல்லுவது முண்டோ? அவ்வாசிரியர் இரங்கிச் சொல்லிக் கொடாவிடில் இவன்தானே ஏடுபார்த்துத் தெரிந்து கொள்ளவே போகிறானெனினும்,

வணங்கி வேண்டிக்கொள்ள வந்தபோது விபரீதமான நினைவும் சொலவும் இருக்கத்தகவே தகாதன்றோ. ஸாமாந்யர்களான நம் முடைய படியே யிதுவானல் *ஸத்யஸந்தா ஜிதக்ரோத:* என்னப் பட்ட பெருமாளுடையபடி இதற்கு விபரீதமாயிருக்க வடுக்குமோ? "சனல்கண்ட ப்ரஹ்மாஸ்த்ரம் போலே" என்று ஆசாரியர்கள் ஸாதிக்கிற கணக்கிலே ஶரணவரணாநுஷ்டாநமும் உணௌ வாயாநுஸந்தாநமும் ஸஹகாரஸாபேக்ஷ ஒரு வ்யக்தியி னிடத்தில் கூடாததாகதலை—என்கிற ஒருவார்த்தையே அண்ணு ஸ்வாமியின் விஸ்தரங்களுக்கெல்லாம் ஸாரமான ஜீவாது.

,, ஐயா தே ஶெத்ரு ஹவதா யதிஜீவிதா மிச்ஹஸி—என் பதில் என்ன ஸநாஜஸம்?" என்று பீதாம்பர பண்டிதர் எழுது வது அர்த்தமில்லாத வார்த்தை. *தேந மைத்ரீ ஹவதா தே யதிஜீவிதாமிச்ஹஸி* என்று இராவணனை நோக்கிப் பிராட்டி அருளிச் செய்திருப்பதுண்டு. இங்ஙனே பெருமாள் அருளிச் செய்யவும் ப்ராப்தம் இதற்கு உபதேசமொழி யென்று பெயரே தவிர வணக்கமொழி யென்று பெயர் கிடையாது. 'பாவீ! அநி யாயமாய்க் கெட்டுப் போய்விடாதே; பெரியாரோடு ஒத்துவாழ்; இல்லாவிடில், நீ பாழாய்ப் போய்விடுவாய்' என்று வயிற்றெரிச்ச லோடு சிறியார்க்குப் பெரியார் சொல்லும் வார்த்தை உலகில் கிடையாதென்று யாரும் சொல்லவில்லை. சரணுகதி செய்யுங் காலத் திலே அப்படிப்பட்ட உபதேச மொழிக்கு ப்ரஸக்தி யேது?

இது ஸர்வேச்வரனுடைய சரணுகதி ப்ரகரணமாகையால் அவ னுடைய தன்மைக்குத் தகுதியாக அப்படியும் சொல்லலாம் என் பது பாலிஶபாஷிதம். ஸர்வேச்வரத்வாகாரத்தை இங்கு நினைப்ப தற்கே வழியில்லை. வெறும் மநுஷ்யத்வாகார மொன்றுதான் இங்கு வைத்துப் பேசவுரியது. அல்லாவிடில், பெருமாள் தரைக்கிடை கிடந்ததே தவறான காரியமாகும். ப்ரபுத்வத்திற்குப் பொருந்த ஆஜ்ஞாபக ரூபமாகவே காரியம் செய்திருக்க வேண்டும். புல்லைப் பரப்பிப் படுக்கை போடாமல் நின்றுகொண்டே மந்த்ர பலத்தாலோ மற்றும் எந்த சக்தி விசேஷத்தாலோ கடலரசனை எதிரே தோன்றப் பண்ணி [ஆண்டாள் * ஆழிமழைக் கண்ணாவென்று தேவதையை யழைத்து நியமித்ததுபோலே] 'வருணா! எனக்கு வழிவிடாய்'

என்று நியமித்துக் காரியங் கொள்ளாதே, ப்ரதிஶயநம் பண்ணினது ஏன்? * ஶயா ஸஂ ஸஊநாஜ்ஞாதொ மஹ ஹொகாநநாத ஊாஹ * என்று பெரியவுடையார்க்கு வழி காட்டின பெருமிடுக்கர் *ஶயா யஷுயஊநாஜ்ஞாதாஃ தீதவஂா மஹத வாநராஃ! * இத்யாதிப் புடைகளிலே வாநரமுதலிகளை நியமித்தும் * ஶயா ஸஂ ஸஊநாஜ்ஞாதொ ஜாநூஊாதொதூஹகொ ஹவ * என்று கடலரசனை நியமித்தும் எளிதாக எழுந்தருள்வதற்குப் பெருமாள் அசக்தரோ? ஆற்றலையெல்லாமடக்கிக்கொண்டு வணக்கங்கொண்டு காரியங்கொள்ளப் பார்த்தவிடத்திலே பாதவத்தையும் கூடவே வைத்துப் பேசுவது என்ன அழகு? விஷயங்களைக் கலந்த கட்டியாகப் பிசிறிப் பிசைந்து பேசுவது பண்டித க்ருத்யமன்று. இராகவன் இப்போது எந்த நிலைமையில் இருந்து வருகிறுரென்பதைக்கூட ஆலோசியாமல் நெஞ்சில் தோன்றினபடியும் வாயில் வந்தபடியும் சொல்லிவிடுவது பிராமாணிகர்கட்குப் பணியன்று.

“செய்யும் ப்ரணயத்தில் குறைவில்லை; ஹஂமம் பண்ணுல் உண்டபாதகம். இந்த பயத்தை முன்பே காட்டாவிடில் அநார்ஜவம் நியதம்” என்கிறுர் பீதாம்பரபண்டிதர் ப்ரணயமென்கிற சொல்லுக்கு என்ன பொருள்? இங்குப் பெருமாளுக்கும் கடலரசனுக்கும் எவ்வகையான பரிமாற்றம்? ப்ரணய கலஹ மித்யாதி ஸ்தலங்களிலே கொள்ளப்படும் ப்ரணய பதத்திற்கு இங்கு என்ன ப்ரஸக்தி? பல்லைக்காட்டிக் காரியங்கொள்ள வந்தவன் வில்லையும் கூடவே காட்டி அச்ச முறுத்திக்கொண்டே வணங்கினுனென்பது எங்ஙனே சேரும்? அச்சமுறுத்துகிற ப்ரகரணம் இதுவன்று கிடீர். ஆர்ஜவம் அநார்ஜவம் என்பதற்கு இன்னது பொருள் என்றே தெரிந்துகொள்ளாமல் அந்தப்பதங்களை ப்ரயோகிப்பார்க்கு நாம் என் சொல்லவல்லோம். காரணத்ரய ஸாரூப்யத்தை ஆர்ஜவமென்று சாஸ்த்ரஜ்ஞர்கள் கூறியுள்ளார்கள். இங்கே உடல் வணங்கியும் மனம் தண்டனையில் நெறிப்புக் கொண்டும் இருந்ததாகப் பொருள் கூறினுல் இது செவ்வைக் கேடே யல்லது செவ்வையாகவே மாட்டாது. ‘அச்சமுறுத்துவதை முன்பே காட்டாவிட்டால்தான் ஆர்ஜவக்குறை பெருமாளுக்கு வந்து சேரும்’ என்று பீதாம்பர பண்டிதர் எழுதுவது தவறு. ஸுக்ரீவ விஷயத்தில் * ஶாவாஂ வயஊநமாஃ * இத்யாதியாகப் பிறகு தெரிவித்த வார்த்தைகளை

முன்னமே தெரிவித்திருப்பதுண்டோ? அங்ஙனம் தெரிவியாமையி ஞல் பெருமாள் செவ்வைக்கேடர் என்று சொல்லுவாருண்டோ? * ஸ்வாம வதஹ்ரு மிதாஹீ தேசிக ஸ்ரீஸூக்திப்படியே ஹாவஹா நயெதாஹீயான பின்பு நிகழ்ந்த சீற்றச் செயலும் அருள் பொலிந்ததே யென்ற அண்ணுஸ்வாமி யெழுதியிருக்கும்போது அதில் அநார்ஜவம் சங்கிக்க அவகாசலேசமு மில்லையே. ஸாரண வாரண ஸமகாலத்திலேயே கடலைத் தொலைத்துவிடுகிறேனென் கிற ஸங்கல்பந்தான் செவ்வைக் கேடாகும். ஒரேகாலத்தில் உத்தம குணர்கள் பக்கலில் ஒன்று சேர்ந்திருக்க முடியாதவைகளான ஸாம தண்ட சிந்தனைகள் பெருமாளிடத்தில் ஒருங்கே கூடியிருந்தன வாகக் காட்டக்கூடிய இடம் ஸ்ரீராமாயணத்திற்குள் சிறிதேனும் கிடைக்குமோ? முழுதும் தேடிப்பார்க்க.

“ஸகாரணெ வஹ்வாய மென்றல் ஹிதஸாவநம் அநார்ஜவமோ?” என்கிறார் பீதாம்பர பண்டிதர். சாஸ்த்ரம் நம் மிடத்தில் சரணுகதி செய்ய வந்ததன்று. * ஸாஷு ம்து வஹு ஹம்ஶித மென்று முறையிடப்பட்டுளது. பெருமாள் இங்கு ஸாஷூவான முறைமையிலேயா தரைக்கிடை கிடக்கிறர்? ராஜ்ய தந்த்ர மென்கிற பேச்சுக்கு இங்கு என்ன ப்ரஸக்தி? ப்ரத்யுப வேசந தந்த்ரமன்றே இது. இவையெல்லாம் அஸம்பத்த வாக் விலஸிதங்கள்.

“இங்கே ஸமுத்ரம் பாஹுவர்ணநம் நயம் பயம் இரண்டையும் காட்டுகிறது” இத்யாதிகளான பீதாம்பர பண்டித வாக்யங்கள் எடுத்துக் கழிக்கவும் தகாதவை. ‘தரைக்கிடை கிடந்த காலத்திலே பெருமாளுடைய திருவுள்ளம் எப்படிப்பட்டது?’ என்று விமர்சிக் கும் ப்ரகரணத்திலே இத்தகைய காடுபாய்ந்த வாக்யார்த்தங்கள் காட்டிலே கூறத்தக்கன. இவ்விடத்திலே கோவிந்தராஜீய வ்யாக்யா நத்திலுள்ள பதப்ரயோஜந விவரணங்களையும் அவதாரிகைகளையும் நோக்கினல் ஸாகரமாரண நினைவு பெருமாள் திருவுள்ளத்தில் (12 ச்லோகம் வரையில்) எள்ளளவும் எட்டிப்பார்க்கவே யில்லையென்பது தெளிவாகும்.

ஶரணவரணாநுஷ்டாநமும் உபாயாநு ஸந்தாநமும் ஸாக்ஷாத்பகவதவதாரமாந ஒரு வ்யக்தியினிடத்தில் எப்படியிருக்கத் தகாதவையோ அப்படியே ஸ்வஸாமர்த்யாவஹேளநாவி இருக்கத் தகாதவைதான்; அதுமாத்திரம் இராகவனிடத்தில் எங்ஙனே கூடிற்று? என்று சிலர் கேட்கக்கூடும். இதனால், பெருமாள் சரணா கதிக்கு, அல்லது ப்ரத்யுபவேஶநத்திற்கு அதிகாரி யல்லர் என்பதும், மநுஷ்ய பாவனைக்குச் சேரப் பல காரியங்களையும் செய்துபோந்த கணக்கிலே இதனையும் செய்தார் என்பதும் சொல்ல வேண்டிற்றாகு மத்தனை யல்லது வேறொன்றும் சொல்லப்போகாது. பல்லைக் காட்டிக் கொண்டு யாசிக்கும் ஸமயத்திலேயே வில்லைக்காட்டி வெருட்டுவதான க்ருத்யமும் மநுஷ்யர்கள் பக்கலில் காணக்கூடியதே யாதலால் மநுஷ்ய பாவனையில் நின்ற பெருமாளுக்கு அதுவுந்தான் பொருந்தினதாக இருக்கட்டுமே என்று சொல்லப் பார்ப்பது பெருமாளை காவ்யபரீக்ஷா கோஷ்டியிலே வைத்துப்பேசுவதாகும். பாலகாண்ட ப்ரதம ஸர்க்கத்திலும் அயோத்யாகாண்ட ப்ரதம த்விதீய ஸர்க்கங்களிலும் விரித்துரைக்கப்பட்ட ஸ்ரீராம குணங்களுக்கு விரோதமாகக் கூறும் கூற்றுக்கள் செவியிலு மேற்கத் தகாதவை.

"பெருமாளை முடிக்கவா நாலுமந்திரிகள் மந்த்ராலோசனை செய்து இவ்வுபாயத்தை நிச்சயித்தார்கள்? இவர் மந்த்ரியாயிருந்தால் எப்படியோ?" என்று பீதாம்பர பண்டிதர் எழுதியிருப்பதும் பொருளற்ற பேச்சு. 'கடலைக்கடந்து வைரியை வென்று வைதேஹியைப் பெற முடியாமற் போனால் மரண மடைவது தவிர வேறு செய்யகில்லேன்'—என்கிற தாத்பரியமே தேறுமாறு சொல்லிக் கொண்ட விதனால் யாதொரு குறையும் சங்கிக்கப் போகாது. மஹாவீரர்களுக்கு ஏற்ற பேச்சே யிது. மரண மென்று திருவாக்கினால் சொல்லிக்கொண்ட மாத்திரத்திலேயே அது ப்ராப்தமாய்விட்டதாக நிச்சயித்து ஆக்ஷேபம் செய்வாருடைய மேதை அற்புதமாகவே யுள்ளது. மந்த்ரிகள் பெருமாளை முடியச் சொன்னதாக யார் சொல்லுகிறார்கள்? மந்த்ரிகளும் முடியச் சொல்லவில்லை. சரணாகதிக்கு மரண ஸங்கல்பம் அங்கமுமன்று. அங்ஙனே பெருமாள் செய்து கொள்ளவுமில்லை. உத்தேசித்ததொரு காரியத்தை ஸாதித்தே தலைக்கட்டுவதென்று தீவ்ரமான உறுதி கொண்டிருக்குமவர்கள் அவ்வுறுதியைக் காட்டுவதற்கு ஶேஷபூதமாகவே வார்த்தைப்

பாடாக ஸ்வமரணத்தையும் ஒரு கல்பமாகப் பேசுவது எங்குமுள்ள வழக்கம். * ஸுராவணா ஊராஸவா * இத்யாதிகள் இவ்வகுப்பில் தானே சேர்ந்தவை இவ்வகையிலே அமைந்த 'மே மரணம் வா' என்ற வார்த்தையின்மீது எத்தனை ஆக்ஷேபம்! எத்தனை படையெடுப்பு! * ஹ-ுயாநஹொ வாரிகாரௗ வ்யதிக-ுஹுவக்ஷெ.*

"ப்ரபந்நரான விபீஷணனை சத்ருவான ராவணன் கையில் ப்ரதிப்ரதாநம் பண்ணும்படி தாமே முடிய நினைத்தாரோ? தேவர்கள் சரணாகதியை ஜொவமாக்கஸங்கல்பித்தாரோ?" என்று வெகு அவலீலையாக எழுதுகிறார் பீதாம்பரபண்டிதர். ஸ்ரீராமாயணத்தில் எத்தனை ஸந்தர்ப்பங்களில் பெருமாள் தம்முடைய மரணப்பேச்சை வாய்விட்டுக் கதறி யிருக்கிறாரென்று தெரியுமோ? * வீதயா ரஹிதொஹம்வெ நஹிஜீவாநி ஃுக்ஷணா । ஊுதம் ஸொ க்ஷ்ந ஊஹதா வீதாஹரணஜெந ஊாூ। வாரஹொகெ ஊஹாராஜொ ந-ுநம் ஊுக்ஷ்ரதி ஜெவிதா ॥......ஃவயா விரஹிதாஹம் ஜொக்ஷ்ர ஜீவிதஊாதுநஃ ॥* இத்யாதிகள் ஆரண்ய காண்டத்தில் பெருமாள் உக்திகள். இப்படியே யுத்தகாண்டத்திலும் 'ஸுராவணா ஊராஸவா' என்றும் 'ஸ்ஊ்ர ராஊஸ்ர ராஊஃவம் வாஸ்ரம்தா ஊஊவம்யாஜெ' என்றும் சொன்ன அடுத்த க்ஷணத்திலேயே * நஹி யாஜெந ஜெகாயம் ஜெநவ வ்யாஜெணநம் வீதயா।...கிம்ஜெ ராஜ்ரந கிம்வ்யாஜெணஃ யாஜெ காயம் நவிஜ்ரதெ।...ஐஜெஹவ ஊரணம்ப்ரூயஃ நதா வம்யாவிம ஹம்ணாூ * இத்யாதிகள் பெருமாள் திருவாக்கில் நிரமம்ஃமாக வந்திருக்கின்றன. தரைக்கிடை கிடவாமல் மஹாவீரனும் ஊஹாயீரயளரெயனும் ஸ்ரீராமன் காரியஞ் செய்யுமிடங்களிலேயே இப்படிப்பட்ட பேச்சுக்களிருந்தால் அவ்விடங்களில் விளையாத ஆக்ஷேபம் தரைக்கிடை கிடக்குங்காலத்ததான அத்யமே மரணமென்பதில் என்ன விளையக்கூடும்? * ஸுவிஃம்வி தவாவ வாநர ஹஜெடஃ * என்றுப்போலே ஸ்ரீராமாயணத்தை ஓரிடத்திலும் ஆழ்ந்து பாராமல் மேலெழவும் பாராமல் நெஞ்சில் தோற்றுகிறபடியெல்லாம் ஆக்ஷேப தூஷணைகளைச் செய்து கொண்டிருப்பார்க்கு நம்முடைய உக்திகள் எங்ஙனே பயனளிக்கும்? இப்போது இதில் நாம் காட்டியுள்ள விஷயங்கள் ஏற்கனவே அண்ணாஸ்வாமியின் க்ரந்

தங்களில் பரக்க நிரூபிக்கப்பட்டிருப்பவையே. ஆனாலும் இங்கு ஸாரமாக எடுத்துக் காட்டினேமத்தனை. [ஸுஹ்ருத் மே ஸாமாஸ்ய த்ராணம் வா (மே) மரணம் வா] என்கிறவொரு அந்வயம் தவிர மற்றைப் படி இவர்காட்டும அந்வயங்கள் பெருமாளுடைய திருவுள்ளத்திற்கும் வால்மீகியின் அபிப்ராயத்திற்கும் வெகு தூரத்திலே நிற்கும்.

மே என்பதற்கு 'என்னிடமிருந்து' என்று பஞ்சமியாக அர்த்தங்கூறி, „உத்த: மரணம் வா! ஸுய த்ராணம் வா ஸாமாஸ்ய என்றால் என்ன வ்யுத்க்ரமம்?" — என்று கேட்கிறார் பீதாம்பர பண்டிதர். இப்போது இவர் காட்டுகிற அந்வயக்ரமம் ஒரு பொருளையும் தரமாட்டாதது. ஒரு வியாக்யாநகாரரும் காட்டினதுமன்று. மே என்பதற்குப் பஞ்சமியாகப் பொருள்கொள்ள அவசியம் ஏற்பட்டால் கொள்ளலாம். அதை மறுப்போமல்லோம். இங்கு அப்பொருள் அஜாகளஸ்தந துல்யமாகும். ஸாகரத்திற்கு என்னிடமிருந்து தரணமாவது-என்று ஒரு விலக்ஷணமான அர்த்தம் இவர் கூறவருகிறாரே, இதில் ரஸமறிந்தவர் இவரொருவரே யாகவேணும். விசாரமோ ஈட்டு ஸ்ரீஸூக்தியை யநுஸரித்துப் பிறந்துளது. அதற்கிணங்காத வேறொரு அஸமஞ்ஜஸப் பொருளைச் சொல்லிக்கொண்டு 'இப்பொருளில் என்ன வ்யுத்க்ரமம்? என்று கேட்பது விவேகிகளின் பணியாகுமோ? மூலத்தில் மே மரணம் என்றுள்ள பதச்சேர்த்தியைப் பிரிக்காமல் அந்வயிப்பது க்ரமிகாந்வயம்; அதைப்பிரித்து மிகவும் வ்யவஹிதமான வேறொரு பதத்தோடே சேர்த்து அந்வயிப்பது வ்யுத்க்ரமாந்வயம். காவ்யம் வாசிப்பவர்களுக்கும் இது எளிதாகத் தெரியுமே. அந்தோ! ஒவ்வொன்றையும் முறை கேடாக வேயா எழுத வேண்டும்?

"உபாய விகல்பத்தில் இரண்டு கல்பத்திலும் பலன் ஒன்றேயாகவேணும்" என்று தொடங்கி இவர் எழுதியிருப்பதும் தவறு. இங்கு உபாய விகல்பமாக பாலிசனும் நினைக்க முடியாது. ப்ரத்யுபவேசநமாகிற உபாயம் ஒன்றே நிஷ்கர்ஷித்துப் பரிக்ரஹிக்கப்பட்டு விட்டது. அதில் விகல்பமே கிடையாது. தரணம் என்பது இவ்விடத்தில் பலனே யல்லது உபாயமன்று. ஸ்ரீவசநபூஷணத்தில் இது ஸுஸ்பஷ்டம். மேல் விளைய வேண்டிய ராவணவத ஸீதா ப்ராப்திகளைப்பற்ற இது உபாயமன்றோ என்ன வேண்டா. ஒன்றுக்கு ஒன்றைப்பற்ற உபாயத்வமும் மற்றொன்றைப்பற்ற ஹேதுத்வமும் சாஸ்த்ர

ஸித்தம். ஶரணவரணமாகிற உபாயத்தினால் ஶரணத்தை இங்குப் பலனாகக் கொண்டாரே யல்லது உபாயமாகக் கொண்டா ரல்லர். இதை நாம் எடுத்துச் சொல்லுவது சிறு குழந்தைகளுக் குச் சொல்வதுபோலவே யுள்ளது. ப்ரகரணம் உபாய பரிக்ரஹ ப்ரகரணந்தான். அந்த வுபாயம் விபீஷணாதிகளின் வார்த்தையினா லும் பெருமாள் தம்முடைய ருசியினாலும் ஶரணவரணமே யென்பதாக உறுதி செய்யப்பட்டு அநுஷ்டிக்கப்பட்டுமான பின்பு அதில் விகல்பமென்கிற பேச்சுக்கு ப்ரஸக்தி யேது? "மே மரண மென்கிற ஒரு கல்பமுமுண்டு" என்று ஒரு தடவைக்கு இரு தட வையாக எழுதி யிருக்குமிவர் தம்முடைய கருத்துக்கே மறுப்பாகக் காட்டும் தூஷணங்கள் பரிஹாஸ்யங்களே யல்லது வ்யாக்யாநங்களல்ல என்று, இவருடைய அபத்தச் சுவடியின் வீக்ஷணத்தில் விரமிப்போமிப்போது.

அறிவிற் சிறந்த ஆரியர்களே! ஈட்டில் ஸௌலக வ்யாஹாரி களினால் ஸம்வதிதமான "இத்தை முடித்தல் கடத்தல்" என்கிற வாக்கியமே இத்தனை விசார விரிவுகளுக்கு மூலமாயிற்று. அந்த வாக்கியம் அப்படியிருந்திருக்கத் தகுதியுண்டா வென்று ஆராய்ச்சி செய்யலாமே. அங்கு நம்பிள்ளை தாத்பரிய ஸரணியில் ஸாதித் தவரே யன்றிப் பதவுரை முறையில் ஸாதித்தவரல்லரே. வாய்திறக் கும்போதே இத்தை முடித்தல் என்று ஸாதிப்பரா? கடலைக் கடத் தல் நேராவிட்டாலன்றோ அதனை முடித்தல் வேண்டும். இத்தைக் கடத்தல் முடித்தல் என்று ஒழுங்குபாடாக ஸாதிப்பதில் என்ன தடை? முறைதவறி யிருப்பதுகொண்டே இங்கு ஏதோ பிழை புகுந்திருத்தல் வேண்டும் என்று ஏன் தெளிந்து கொள்ளலாகாது? இற்றை முடிதல் கடத்தல் என்பது மாத்திரம் முறைமையோ? என்ன வேண்டா. ஸ்ரீராமாயண ச்லோகத்தின் ஆநுபூர்வியில் ஆர்க் கும் விப்ரதிபத்தி யில்லையே. மூலமுள்ளபடிக்குச் சேருகிறது என் பதே யல்லாமல் மற்றுமுண்டான தகுதிகளும் தத்வப்ரதிஷ்டையில் நிரூபிக்கப்பட்டே யுள்ளன. ஸ்ரீராமாயண மூலத்தையே மாற்றி விடப் புகுந்தவர்களும் உள்ளார்களெனினும் அன்னவர்களைப் பொருள்படுத்தி நாமுரைக்க வேண்டுவ தொன்றுமில்லை. வ்யாக்யா தாவான நம்பிள்ளை திருவாக்கில் இத்தை முடித்தல் என்பது முந்துற இருப்பதற்கு எள்ளளவேனும் தகுதியுண்டா? என்று நெடுந்தூரம் சிந்தித்துக் காண்மின்,

இரண்டாவது :—இந்த விபரீதார்த்தம் ஸ்ரீராமாயண ப்ரகரணத்திற்குப் பொருந்தவில்லை யென்ப தொன்றேயோ? ஈட்டு ப்ரகரணத்திற்கும் இறையேனும் பொருந்தவில்லையே. ஆழ்வாரை மேன்மேலும் உகப்பிப்பதில் எம்பெருமானுக்குத் திருவுள்ளமே யல்லது ஆழ்வாரைத் தொலைத்துவிடுவதாக எம்பெருமான் ப்ரதிஜ்ஞை பண்ணினுனென்று உண்மையான ஸ்ரீவைஷ்ணவர் வாயில் வருவதுமுண்டோ? ஆழ்வாருடைய ஒவ்வொரு பாசுரத்தையும் அல்லது ஒவ்வொரு அக்ஷரத்தையும் எடுத்துக் கொள்வோம். ஓரிடத்திலாவது இத்தகைய ரஸாபாஸப் பொருள்படுமாறு ஸ்ரீஸூக்தியுளதோ? * தண்டாமஞ் செய்து என் எண்தானானே * என்று ஆழ்வார் ஸாதிப்பதையும் அதற்கு நம்பிள்ளை பணித்த ஸுநவவ்யாக்யானத்தையும், மற்றும் "வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று, ஆர்வுற்ற என்னை யொழிய என்னில் முன்னம் பாரித்துத் தானென்னை முற்றப்பருகினான்" என்பது முதலான பாசுரங்களையும் ஸேவிக்கப் பெற்றவர்களுமா ஆபாஸப் பொருளை அகத்திற் கொள்வது? * எங்கள் குழுவினில் புகுதலொட்டோமென்கிற பீதாம்பர பண்டிதஜ்ஞாதிகளான ஸ்ரீவைஷ்ணவ வேஷதாரிகள் யாதானும் சொல்லுக. ஆழ்வாரளவிலே எம்பெருமான் படுகாடு கிடக்கிறபடியைப் பாசுரந்தோறும் அறியவல்ல பாக்யசாலிகளுமா நெஞ்சால் நினைக்கவுமொண்ணாத பொருளைப் பேசவேண்டும்?

* பாவியேனைப் பலநீ காட்டிப்படுப்பாயோ * இத்யாதி பாசுரங்கள் இல்லையோ? * நலிவானின்ன மெண்ணுகின்றாய் * என்றீ பதிகம் பதிகமாகப் பேசவில்லையோ ஆழ்வார்?—என்று, அருளிச் செயலின் போக்கறியாதார் சிலர் க்ஷேபிப்பரேல், அப்பாசுரங்களைப்பற்றி ஸ்ரீவசநபூஷண ஆசார்ய ஹ்ருதயாதிகளில் அருளிச்செய்யுமதை ஸதாசார்ய ஸந்நிதியில் கேட்டுணர்மின் என்போமத்தனை. கொடுவுலகத்திலிருப்பைப் பொறுக்கமாட்டாமல் ஆர்த்திமிக்குப் பேசும் பாசுரங்கள் தனிப்பட்டவை. * யானொட்டி யென்னுள் * என்கிற பாசுரங்கொண்ட பதிகம் பரமானந்தம் பொலியப் பேசியது. இதில் ஆர்த்தியின் கந்தமும் எட்டிப் பார்ப்பதன்று. எம்பெருமானுடைய ஒப்புயர்வற்ற இனிமையைப் பேசுவது இத்திருவாய்மொழிக்கு ப்ரமேயமென்று மணவாளமாமுனிகளும் நூற்றந்தாதியில் அருளினார். அப்படிப்பட்ட திருவாய்மொழியில், எம்பெருமான் ஆழ்வா

றைத் தொலைத்துவிடுவதாக ப்ரதிஜ்ஞை செய்தானென்பதும், "அதற்குத் தாத்பர்ய மென்னவென்றால்" என்று பேசத்தொடங்கிக் காடுபாய்வதும் அநுவதிக்கவும் தகாதவை.

இறவை முடிதல் என்றால் ஈட்டு ப்ரகரணத்திற்கு நன்கு பொருந்துகிறதோ வெனில், ஆச்சரியமாகப் பொருந்துகிறது. இதை நாம் உபபாதிக்க அதிகப்ரிச்ரமம் கொள்ள வேண்டாம். திருநெடுந்தாண்டக வ்யாக்யான அவதாரிகையில் (பெரியவாச்சான்பிள்ளை)

'இனி முகங்காட்டா தொழியில் ஜகத்து அநீச்வரமாமென்று பார்த்து ஆழ்வார்க்கு முகங்காட்டி, தானும் இவரும் ஜகத்து முண்டாம்படி பண்ணினான்"

என்றருளிச் செய்திருக்கும் ஸ்ரீஸூக்தி யொன்றைக் காண்மின். இதைப்பற்றின விவரங்களை அண்ணங்கராமி தக்க ஸமயங்களில் வெளியிடுவர். எம்பெருமான் ஆழ்வார் பக்கலிலே *ஆவாஸம் த்வஹஸிசாரி* என்றாற்போலே குடியிருக்க விரும்புவதும், 'இப் பெரும்பேறு நமக்குக் கிடைக்குமோ கிடைக்காதோ' என்று அவன்தான் தளும்பி நிற்பதும், 'இது கிடைக்காவிடில் பின்னை யிருந்து நாம் ஜீவிப்பதுமுண்டோ?' என்று அவன் ஸ்வஸத்தையில் வெறுப்புக் கொள்வதும், 'ஆழ்வார் நம்மை அங்கீகரித்தால்தான் நமக்கு ஸத்தையுண்டு, இல்லையேல் ஸம்ஸாரிகளைப் போலே நமக்கும் து:ஸ்வப்நமயத்தனே' என்று அவன் எண்ணுவதும் ஆக இப்படிப்பட்ட ரஸமயப் பொருள்களை ஈட்டில் வாரி யிறைத்திருக்கின்ற நம்பிள்ளை திருவுள்ளத்தில் அவத்யமயமான வொரு வாக்கியம் வந்ததாக ஸ்தாபிக்க முயல்வாருமுண்டாவதே!. எம்பெருமானைப் பெறாமல் ஆழ்வார் முடியநிற்பதும், ஆழ்வாரைப் பெறாமல் எம்பெருமான் முடியநிற்பதுமாக நம்பிள்ளை போல்வார் வியாக்கியானங்களில் அடிக்கடி காண்கிறோம். எம்பெருமான் ஆழ்வாரை முடித்துவிடுவேனென்று ப்ரதிஜ்ஞை பண்ணுவதான பொருள் ஸர்வதா அஸம்பாவிதமே. "ஆழ்வார், தன்னைப்பிரிந்து துவண்டு முடிந்துபோமளவாக எம்பெருமான் செய்வதுண்டே, அதுதான் முடித்தலாக இங்குக் கொள்ளலாகாதோ?" என்னில், "புணர்தொறு மென்னக் கலந்து பிரிந்து ஜ்ஞாந பக்திகளை வளர்த்

தது கனங்குழையிடக் காது பெருக்குதலும் மாஸோபவாஸி போஜனப்புறப்பூச்சும் போலே ஆற்றநல்ல மாபோகச் சிரமமாக." என்ற ஆசார்ய ஹ்ருதய திவ்யஸூக்தியின் சுவடறிவார் இங்ஙனே பேசார்.

* ஸ்வஜநம்வதிக்ஷா கேவொஷும் கரொதிப்படியே ஏதுக்கு இத்தனை அநர்த்தங்கள்? * யத்தாத்ரூஸாகரமஸாஂ ராகவவீர! வீக்ஷ்ய விஸ்ருஷ்டதாவிதி ஸமொவிய ஸமுத்ராஜள। ஸ்க்ராயம் மாணஃ கதரகொடிமதஃ கியாநுவா கஸ்ய ஹ்ருதிதஃவஶ ஸஹொ வத கஸ்ய ஸஹிஃ! * (அதிமாநுஷஸ்தவம்) என்று அகங்குழையும்படியான திருக்குணம்வாய்ந்த ராகவன் * ஸ்வருஜெயொ ஸஹொஷயிஃ இத்யாதிகளாலே பக்தனால் கொண்டாடப்பட்ட கடலரசன் திறத்தில் குற்றம் காணாதவளவிலேயே க்ரூர நினைவைக் கொண்டாரென்னும் பேச்சை மீண்டுமீண்டும் பேசாதீர்கள். இப்படிப்பட்ட அபார்த்தம் நம்பிள்ளை பணிக்கவும் தகாது, இராகவன் இதற்கு இலக்காகவும் தகாது.

* தவ ஸா ஸேதுபந்தேந ஸாகரோச்சோஷணேந வா ஸர்வதா ஸாஹாய்யமேஷ்யாமி ஸாகரஸ்யாஸ்ய ஸம்வநே ॥ * என்று விபீஷண சரணாகதிக்கும் முன்னமே பெருமாள் பேசியிருக்கும் பேச்சுக்குப் பாங்காகவே யுளது இவ்வர்த்தம்— என்கின்றவர்கட்கு ஒரு ரஹஸ்யார்த்த முபகரிப்போமிங்கு. ஸாகரோச்சோஷணேந வா’ என்றதற்கும் அத்யமே ச்லோகத்திற்கும் யாதொரு புணர்ப்புமில்லையென்று பண்டே பரக்க நிரூபிதம். மற்றொன்றும் மதியிற் கொண்மின். ஸாகரோச்சோஷணேநேதி ந ஶோஷயதேரூபம்; அபி து ஶுஷ்யதேஃ. ஸாகரஸ்ய ஶுஷ்கீகரணமிதி நார்த்தஃ; அபி து ஶுஷ்கீபாவோர்த்தஃ. நாத கர்த்ருக ஸாகர கர்மக ஶோஷணம் நார்த்தஃ. ஸாகரஸ்ய உபாயீநஃ ஸ்வத ஏவ ஶுஷ்கீபாவோர்த்தஃ. ‘கடலரசன் நாம் அணைகட்டிச் செல்லுமாறு உடன்பட்டோ, அல்லது அந்த ப்ரயாஸமும் நமக்கு வேண்டாமல் நடந்தே நாம் செல்லும்படி தன்னை வற்றிக்கொடுத்தோ உபகரிக்க நாம் கடந்துவிடலாம்’ என்று பெருமாள் கூறுவதாகக் கொள்வதே இங்கு மிகச்சிறந்த பொருள். பரத்வப்பிடாரைக் காட்டவல்ல பொருளைக்காட்டிலும் நீர்மைக்

குணத்தைக் காட்டவல்ல பொருளே ஸ்ரீராகவன் திறத்தில் ஏறக்கும் என்பது நம் ஆசார்யர்களின் ஸித்தாந்தமாதலாலும், மௌனவ்ருத்தியொன்றுமின்றியே எளிதாகக் கிடைக்கும்பொருளே கொள்ளற்பாலது.

* ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே। அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம ॥ * என்று யாதவாப்யுதயத்தில் தேசிகன் பணித்தபடியும் அதற்கு மூலமாக ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலுள்ளபடியும் ஸமுத்ரதேவதைக்கு யமுனையாறு தன்னை வழிகொடுத்தாற்போலே இராகவனுக்கும் அங்ஙனே கடல் செய்யலாமாதலால் அந்த ரீதியே இங்கு விவக்ஷிக்கப்படுகின்றதென்கை மிகப்பொருந்தும்

முடிவில் சிறியதோர் விண்ணப்பம். அபார்த்தங்களையுங்கூட ஸத்யார்த்தங்களாகவே கொண்டு ஸமாதிக்க மஹான்களுங்கூட ஸாஹஸங்கள் செய்வது பிசகு என்று நாம் எண்ணவே முடியாது * ஸ்வார்த்தாநாந்நித்ய. . .ஸாதநம் நந்த்யதிருஷ்ட ஸ்வயம்பூராஜ * என்று ஆழ்வானே பணிக்கும்போது நாமெல்லாம் எந்த மூலைக்கு? நன்றே நீர்தர், ஒரு வழியில் வாஸனை பண்ணிவிட்டால் அதில் நின்றும் நெஞ்சைப்போப்பது எம்மாணபினர்க்கும் எளிதன்றுதான பிடிவாதமென்பது ஜந்மஸ்தாநங்களுக்கு அவர் ஜநீயமே. இதில் வியப்பொன்றுமில்லை அச்சுப் புத்தகங்களிலும் ஓலைப்புத்தகங்களிலும் ஆராய்ச்சியில்லாமே விச்வாஸம் வைத்தவர்கள் கரமேண பலபல விஷயங்களை ஆராய்ந்தால் திண்ணமாகத் தாங்களே தெளிவு பெற்றிடுவர்கள் என சிற்றறிவுகெட்டிய ஓன்றிரண்டு விஷயங்களை நான் காட்டுகிறேன், காண்மின் ,—பெருமாள் திருமொழியில் * வளையவொரு சிலையதனால் மதிளிலங்கை யழித்தவனே * என்றதற்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் " வ்யஸநாத்யநைகள் வாய்மடியு மூரை மநுஷ்யத்வத்துக்கு ஏகாந்தமான வில்லாலே அவனுடைய ஊரை அழியச் செய்தவனே " என்று காண்கிறது இதில் " வாய்மடியும் ஊரை " என்பதற்கு எங்கே அந்வயம் ? " அவனுடைய ஊரை " என்பதற்கு எங்கே அந்வயம்? இப்படியா பெரியவாச்சான்பிள்ளை அருளிச் செய

திருப்பர். இப்படியே பாடம் பல பதிப்புக்களிலும் ஏறிவருகின்றது. அதிலேயே * ஆலிநகர்க்கதிபதியே * என்றவிடத்து "வாலியைக் கொன்று ஊரிலிதன்னைத் துணையாகக் கொள்ளப் பெற்றதே!" என்று ஒரு பதிப்பில் பாடமும், மற்றொரு பதிப்பில் மற்றொரு வகையான பாடமும் காண்கிறது. ஒன்றாவது பொருந்துமா என்று பாருங்கள். ஆசாரியர்கள் அமுத மொழிகளை நமக்குச் சேமநிதியாகவே இட்டருளினர். அவை நாளடைவில் பல காரணங்களால் பலவகைப்பட்ட விக்ருதிகளை அடைந்திட்டால் அவற்றையெல்லாம் ஒருவர் எடுத்துரைக்க நாம் இசைந்திடுவதா என்கிற பொறுமையுடையார் நல்ல அர்த்தங்களையும் சுத்த பாடங்களையும் அநியாயமாய் இழந்தே போகவேண்டுமத்தனை.

பல பெரியார்கள் வெகுநாளாக ஆதரித்து ஓதிவருகிற பாடங்களை ஒருவருடைய உத்போதநத்திற்காகத் திருத்திக் கொள்ள வேண்டும்படியாக நேர்ந்துவிடுகிறதே யென்கிற வருத்தம் அல்லது வெட்கம் சில மஹான்களுக்கு இருக்கக்கூடியதே. அதற்கு நாமென் செய்வோம். பெரிய திருமொழியின் சாற்றுப் பாசுரமாகிய * குன்றமெடுத்து ஆநிரை காத்தவன் தன்னை * என்கிற சாற்றுப் பாசுரத்தின் இரண்டாமடியை "மன்றில் மலி புகழ்" என்றே உலகமெங்கும் ஸேவித்துவருவதை நாம் காண்கிறோம். வேறுவகையான பாடம் ஒருவருடைய வாயிலும் வந்ததாக இதுவரை நாம் கண்டதில்லை; காணப்போகிறதுமில்லை. ஆனால் வழங்கிவருகிற பாடம் என்றைக்கோ தவறாக வந்துபுகுந்து உலகமெல்லாம் பரவிவிட்டது என்று தான் சொல்லித் தீர வேண்டியதாயிருக்கிறது. அப்பெரிய திருமொழியின் பதினோராம் பத்திலேயே இரண்டாவது திருமொழியின் இறுதிப் பாசுரமாகிய * வென்றி விடையுடன் * என்கிற பாட்டின் இரண்டாமடியில் "மன்றில் மலி புகழ்" என்கிற பாடம் உண்டேயன்றி மேற்குறித்த சாற்றுப் பாசுரத்தில் அது கிடையாது, பொருந்தாது. அதைப்பற்றி அண்ணஸ்வாமி (பெரிய திருமொழி) திவ்யார்த்ததீபிகையில்—(அப்பாசுரத்தினுரையில்)

"இரண்டாமடியில் 'மன்றில் புகழ்' என்ற பழைய பாடம் மறைந்து போய் 'மன்றில் மலி புகழ்' என்ற புதிய பாடமே எங்கும் பரவிநின்றாலும் அது பெரியோர்க்கு உடன்பாடன்று; இத்திருமொழியில் நேரசை முதலான பாசுரங்கள் தோறும்.

"ஒவ்வோரடியும் ஒற்றொழித்துப் பன்னிரண்டெழுத்தும் கிளையசை முதலான பாசுரங்கள்தோறும் ஒவ்வோரடியும் ஒற்றொழித்துப் பதின்மூன்றெழுத்தும் அமைந்துள்ளன வென்பதைக் கண்டறிந்தால் இப்பாட்டில் 'மலி' என்பது அதிகப்படியான பாடமென்று எளிதிற் புலனாகும்"

என்று அழகாக நிரூபணமும் காட்டியிருக்கிறார். அதைக் கண்டவாறே, "ஜுஷ்டீச்வராத் தோஷ:, ஹாஜஹஸ்த்வாத் தோஷ: என்கிறபோலே பொருந்தவிடக்கூடாதா என்ன? அது தவறான பாடமென்று ஏதுக்கு எழுதவேணும்?" என்று சீறிப்பேசுகிற ஸ்வாமிகள் மிகையாகக் காணப்படுகிறார்களே யன்றி ஜுஷ்டீச்வ ஹாஜஹஸ்த்வாதிகளைக் கொண்டு ஸமாதானம் பண்ணுகிற வழியைப் பெரியவாச்சான்பிள்ளை முதலான பூர்வாசாரியர்களும் விட்டிட்டு இலக்கண வழியைப் பின்சென்றே பல திருத்தங்களை வியாக்கியானங்களில் காட்டியுள்ளார்களென்பதை யாராய்ந்து தெளிவு பெறுவார் சிலரே. ரஹஸ்யஜ்ஞர்களும் தமிழ்ப்பண்டிதர்களுமான பல மஹான்கள் திருத்திப் பதிப்பித்திருக்கின்ற திவ்யப்ரபந்தப் பதிப்புகளிலெல்லாம் (நாம் மேற்காட்டிய விடத்தில்) மலி என்பதின்றியே 'மன்றில் புகழ்' என்ற பாடமேயுள்ள தென்பதையும் நோக்காமல், எதற்கும் மறுப்புக் கூறிக்கொண்டே யிருக்கவேணுமென்கிற நோக்குடன் எதையேனும் சொல்லிக் கொண்டிருப்பாருள்ள விடங்களில் அன்னவர்களுடைய அபிநிவேசத்திற்கும் அபிமானத்திற்கும் தகுந்தபடியே சொல்லிக்கொண்டும் எழுதிக்கொண்டும் 'ராஜாயஸ்வஸ்தி, ராவணாயஸ்வஸ்தி' என்று பேசிப் போது போக்குவாரைப்போலே யிருக்கவேண்டுமென்பது காலநிலைமைக்கு ஒத்ததாயினும், உண்மைகளை மறைத்து அடக்கிவைத்து, அபத்தங்களையெல்லாம் ஆதரித்திருக்கமாட்டாத தன்மையே காரணமாக இவ்வுலகத்தாருடைய வருத்தத்திற்குப் பாத்திரமாகும்படி சில மஹான்களுக்கு நேர்ந்து விடுகின்றது. இதுவுமொரு பகவத் ஸங்கல்பமே!

இங்ஙனம் —

அடியார்க்கு அடியேன்,

தி. வி. சிங்கராய தாஸன்.



ஸ்ரீ

# ராமாநுஜ ஸித்தாந்த வைஜயந்தீ

மாதந்தோறும் வெளிவரும் ஸத்ஸம்ப்ரதாயார்த்த ப்ரகாஶக பத்ரிகை.

தொகுதி 1. | பத்ராதிபர் வடகலை இராமாநுஜாசாரியார் | பகுதி 8

ஸ்ரீரஸ்து
ஶ்ரிய:காந்தாய நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

நமோஸ்து ராமாநுஜபூர்ய நம: ஸம்யோகிநே |
யஸ்ய ப்ரஸூக்திஸந்த்ராணாத் கஜ்ஜல்யுஸமீக்ஷ: ||
வேதவேதாந்த வேதாம்ப ஶாஸ்த்ரார்த்த ப்ரகாஶிநீ |
ஸ்ரீராமாநுஜஸித்தாந்த வைஜயந்தீ விஜ்ரும்பதாத் ||



## ஆனிதன்னிற் சோதிநன்னாள்.

[பெருமாள் கோவில் ப்ரதிவாதி பயங்கரம்
ஸ்ரீ உ. வே. அண்ணங்கராசாரியார்]

இன்று மாநிலத்தில் முன் நம் பெரியாழ்வார் வந்துதித்த ஆனி தன்னிற் சோதி யென்னும் நன்னாள். நன்றிபுனை பல்லாண்டு பாடிய நம் பட்டர்பிரான் வந்துதித்த நல்லானியிற் சோதிநாளென்று பெரியார் பெருமை பாராட்டும் நாள் இது. இந்நாளுக்குப் பெருமை பயந்த பெரியாழ்வாருடைய பெருமையை இன்று சிறிது அநுபவிப்போம்.

பெரிய ஆழ்வாரென்று இவரை எது கொண்டு கூறினர்? மற்ற ஆழ்வார்களிற் காட்டில் இவர் வயதிற் பெரியரல்லர்; பெரிய பெரிய பிரபந்தங்களை இயற்றினருமல்லர். உண்மையில், இவரினும் வயதிற் பெரியராயும் ஆயிரக்கணக்கான பாடல்களையுடைய பெரிய பிரபந்தங்களைப் பணித்தவராயுமுள்ள பரபக்ஷ கூடஸ்தரான நம்மாழ்வாரைப் பெரியாழ்வாரென்னாது, விட்டுசித்தரைப் பெரியாழ்வார்

ரென்றது என்னே! என்னில்? இதற்கு இரண்டு ஆசார்ய சிகாமணி கள் இரண்டு வகையான காரணங்களை வெளியிட்டருளினர்.

ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் சூடிக்கொடுத்த நாச்சியார் விஷய மாக அருளிச்செய்த கோதாஸ்துதியில்—“ 𑌤𑌾𑌤𑌸𑍍𑌤𑍁 𑌤𑍇 𑌮𑌧𑍁𑌭𑌿𑌦𑌃
𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌲𑍇𑌶𑌵𑌶𑍍𑌯𑌾𑌤𑍍 𑌕𑌰𑍍𑌣𑌾𑌮𑍃𑌤𑍈𑌃 𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌶𑌤𑍈𑌰𑌨𑌵𑌾𑌪𑍍𑌤
𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍍 । 𑌤𑍍𑌵𑌦𑍍𑌭𑍁𑌕𑍍𑌤𑌮𑌾𑌲𑍍𑌯𑌸𑍁𑌰𑌭𑍀𑌮𑍁𑌪𑌹𑍃𑌤𑍍𑌯 𑌮𑌾𑌲𑌾𑌮𑍍
𑌲𑍇𑌭𑍇 𑌮𑌹𑌤𑍍𑌤𑌰𑌪𑌦𑌾𑌨𑍁𑌗𑍁𑌣𑌂 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌮𑍍 ॥ [தாதஸ்துதே மதுபித: ஸ்துதி லேஸவஸ்யாத் கர்ணாம்ருதை: ஸ்துதிஸதை: அநவாப்த பூர்வம். த்வத்புக்தமால்ய ஸுரபீகா முபஹ்ருத்ய மாலாம் லேபே மஹத்தர பதாநுகுணம் ப்ரஸாதம்.] என்றுள்ள ச்லோ கத்தை நோக்குமிடத்து, ஆண்டாள் சூடிக்களைந்த பூமாலையைப் பெருமாளுக்கு ஸமர்ப்பித்ததனாலேயே விட்டுசித்தர், பெரியாழ்வார் என்கிற பட்டப் பெயரைப் பெற்றருளினார் என்று தேசிகன் திரு வுள்ளம் பற்றுவதாகப் புலப்படுகின்றது. ஆழ்வார்க்கு விசேஷண மான பெரிய என்னும் பதத்தையே மஹத்தரபத மென்று தேசிகன் குறிப்பிடுகிறா ரென்பது ஸம்ப்ரதாயம். ஆனால் அவ்விடத்திற்கு உரை யெழுதியுள்ள சில மஹான்கள் மஹத்தரபத மென்றதற்கு மிகச் சிறந்த ஸ்தானமாகிய நித்யவிபூதி யென்று பொருள் கொண் டார்கள். அங்கு தேசிகனுடைய ஹ்ருதயத்தை ஸம்பிரதாயம் வல்ல பெரியோர்கள் தெரியக்கண்டு கொள்வது.

இனி, மற்றொரு ஆசார்ய சிகாமணியின் நிர்வாஹத்தை நிரு பிப்போம்.

“ மங்களா சாசனத்தில் மற்றுள்ள வாழ்வார்கள்
தங்கள் ஆர்வத்தளவு தானன்றிப்—பொங்கும்
பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றான்
பெரியாழ்வா ரென்னும் பெயர்.”

என்பது உபதேச ரத்தினமாலையில் மணவாள மாமுனிகளின் பாசுரம். மற்றுள்ள ஆழ்வார்களுக்கும் மங்களா சாஸனத்தில் ஊற்ற மிருந்தாலும் அவர்களுக்கு அது எப்போதோ ஒருகாலுள்ளதே யன்றி இப் பெரியாழ்வார்க்குப் போலே நித்யமாயும் முக்கியமாயு மிராது. அவர்கள் எம்பெருமானை ரக்ஷகனாகப்பற்றி அவனிடத்தில் தங்களுடைய வாழ்ச்சியைப் பெறுவதற்கு விரும்புவர்கள். இவ்வாழ் வார் அப்படியல்லாமல் எம்பெருமானுடைய வாழ்வையே தமக்கு

வாழ்வாக நினைத்துப் பெருமாளுக்கு என்ன தீங்கு வருகிறதோ வென்று பயப்பட்டுக் காப்பிடத் தேடுகிற பரமபக்தராவர். ஆனது பற்றியே மற்றுள்ள ஆழ்வார்களைவிட மிக்க பெருமையையுடையவரானது காரணமாகவே இவர்க்குப் பெரியாழ்வாரென்று ப்ரஸித்தியுண்டாயிற்று என்பது இப்பாசுரத்தின் கருத்து. இரண்டு வகையான நிர்வாஹங்களும் அழகியவே.

இனி, இவ்வாழ்வார்க்கு பரத்வ நிரூபகமான மங்களாசாஸநத்தைப்பற்றிச் சிறிது பேசுவோம். அவாப்த ஸமஸ்தகாமனென்றும் ஸர்வ ரக்ஷகனென்றும் ப்ரஸித்தனான ஈச்வரனைக் கண்டால் தமக்கு வேண்டிய மங்களங்களை அவனிடத்துப் ப்ரார்த்தித்துப் பெற வேண்டியிருக்க, தாம் அவனுக்கு மங்களமுண்டாகுமாறு ஆசாஸிப்பது தகுதியோ வென்னில், பகவத் க்ருபையினால் கிடைத்த பக்தியினால் அந்த பகவானுடைய ஸர்வ ரக்ஷகத்வம் முதலான திருக்குணங்களை அடியோடு மறந்து 'இப்பகவான் குறையொன்றுமில்லாமல் இருப்பதே நமக்கு மங்களம்' என நினைத்து மங்களாசாஸநத்தில் ஒருப்படுகின்றாராதலால், இது பக்தி நிலைமைக்குப் பாங்காகவே அமையும்.

ஜ்ஞான தசையென்றும் ப்ரேம தசையென்றும் இரண்டு நிலைமைகளுண்டு. அவற்றுள், ஸர்வேச்வரனை ரக்ஷகனாகவும், தான் அவனாலே ரக்ஷிக்கப்படுகிறவனாகவும் ப்ரணவம் முதலியவற்றில் சொல்லுகிறபடியே தெளிவாகக் கண்டு அநுஸந்திக்கும் நிலைமை ஜ்ஞானதசையாகும். அப்போது "அண்ணா அடியேனிடரைக் களையாயே" "நெடியாய் அடியேனிடர் நீக்கே" "அடியேன் வினையாயின பாற்றே" என்றாற்போன்ற பாசுரங்கள் திருவாக்கில் வெளிவரும்.

இனி, ஸர்வேச்வரனுடைய ஜ்ஞான சக்திகளையெல்லாம் மறந்து அவனது ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களையே அநுஸந்தித்து 'இப்படிப்பட்ட அழகிய திருமேனிக்கு என்ன தீங்கு விளைந்திடுமோ?' என்று அச்சம் சங்கித்து வ்யாகுலப்படும் நிலைமை ப்ரேம தசையாகும். அப்போது ஈச்வரனை ரக்ஷிக்க வழி தேடித் தடுமாறுவார்கள், பல்லாண்டு, போற்றி என்று காப்பிடத் தொடங்குவார்கள்.

மங்களாசாஸநம் பண்ணுகிறவர்கள் ஸர்வ ரக்ஷகனான ஈச்வரனை ரக்ஷ்யனாகவும், அவனாலே ரக்ஷிக்கப்பட வேண்டிய தங்களை

ரக்ஷகர்களாகவும் நினைக்க நேரிடுகிறபடியால் இந்த நினைவு விபரீத வுணர்ச்சியேயன்றே? மயர்வற மதிநலம் பெற்றவர்களான ஆழ்வார் களுக்கு இத்தகைய விபரீதஞானம் கூடாதேயென்று சிலர் சங்கிப் பர்கள். தீவினையின் பயனாக வருகிற விபரீத ஞானம் ஹேயமே யொழிய எம்பெருமானது வைலக்ஷண்யமடியாக வருகிற விபரீத ஞானம் ஹேயமல்ல; மிக உத்தேச்யமாகவு மிருக்குமென்று நம் முதலிகள் ஸமாதான மருளுகின்றனர்.

அயர்வறு மமரர்களென்று போற்றப்பட்ட நித்யஸூரிகளுக் கும் இந்த விபரீத ஞானமுண்டு. 'ஹாவு ஹாவு ஹாவு' என்கிற ஸாமகான கோஷத்தைக் கேட்கும் திருவனந்தாழ்வான் அந்த ஸாம கோஷத்தை அஸுர ராக்ஷஸர்களின் கோலாஹலமென்று மயங்கிச் சீறி அழலை யுமிழ்கின்றானென்று திருமழிசைப்பிரான் தமது உட் கண்ணிறை கண்டு பேசுகின்றார்:—"ஆங்காரவாரமது கேட்டு அழலுமிழும் பூங்காரரவு" என்பது அவ்வாழ்வாருடைய பாசுரம்.

பட்டரும் ஸ்ரீ குணரத்ந கோசத்தில் "ஹேஹாஊஷூாநரக்ஷா வ்யஸநிஸிரஸம் ஸாஜூவகுாஸிஃஔஜஃ கூநஜெக ணாவம் ஸ்ரீ ஹுமவதி யாவயொறாஹாராஷூாநநாத்ஷ—ஸ் நேஹாத் அஸ்தாந ரக்ஷாவ்ய ஸநிபிரபயம் சார்ங்க சக்ராஸி முக்யை: ஆநந்தை கார்ணவம் ஸ்ரீ:! பகவதி யுவயோராஹ ராஸ்தாந ரத்நம்" என்கிறார். பரமபதத்தில் பஞ்சாயுதாழ்வார்களும் ப்ரேமத்தாலே கலங்கிக் காப்பிடா நிற்பர்களென்கிறது இதில்.

இவ்விபூதியிலும் ப்ரேம பரவசர்கள் பலர்க்கும் மங்களாசாஸ நமே யாத்திரையாயிருக்கும்: இதற்குச் சான்றாக இதிஹாஸ புரா ணாதிகளிலிருந்து சில செய்திகளை யெடுத்துக் காட்டுவோம். பரி பூர்ண சக்தியுக்தன் என்கிற உணர்ச்சியும் நம்பிக்கையு மிருக்கும் போதும் ப்ரேமத்தினால் கலங்கி அஞ்சுவது உண்டு என்பதனை முதலிக்கச் சில புராண புருஷர்களைக் காட்டுவர்கள் நம் ஆசாரி யர்கள்.

இராமபிரான் பிராட்டியைத் திருமணம் புரிந்துகொண்டு மிதிலா புரியில் நின்றும் அயோத்திக்கு மீண்டுவரும்போது பரசுராமன் என் வில் வலிகண்டு போவென் றெதிர்வந்த காலத்தில் தசரத சக்ரவர்த்தி அப்பிரானுடைய பிரபல சக்தி விசேஷங்களை முற்றும் மறந்து இளமையையும் ஸௌகுமார்யத்தையுமே பார்த்து அஞ்சிப்

பரசுராமனிடத்திலே அபயம் பிரார்த்தித்தான். "அஹம் வேத்மி மஹாத்மாநம் ராமம் ஸத்யபராக்ரமம்" என்று உறுதியாகக் கூறின விச்வாமித்ர முனிவனது உக்தியைக் கேட்டுவைத்தும், தாடகா தாடகேய நிரஸநம், அஹல்யா சாப விமோசனம், சிவதநுர்ப்பங்கம் முதலிய அரும்பெருஞ் செயல்கள் செய்தமையைக் கேட்டுவைத்தும் தயரதன் கலங்கினானென்றால் இது ப்ரேமத்தின் கனத்தினாலல்லது வேறொன்றாலன்றே.

கௌஸல்யையும் ஸ்ரீராமசந்திரனுடைய பிரபாவங்களை அறிந்திருந்தும் அவன் வநவாஸத்திற்குப் புறப்படும்போது "தத் தே பவது மங்களம்" என்று பலகாலுஞ் சொல்லி ஆசாஸித்தாள்.

ஸீதாபிராட்டியும் ஸ்ரீராமபிரானுடைய வைபவமெல்லாம் அறியுமவளாயிருக்கச் செய்தேயும் திருவபிஷேகம் பண்ணுகைக்காக ஸர்வாலங்காரங்களும் செய்துகொண்டு அவர், சக்ரவர்த்தி திருமாளிகைக்கு எழுந்தருளுகிறபோது அவரது அழகிலே தோற்று இதற்கு என் வருகிறதோவென்று ப்ரேமத்தாலே கலங்கி "வதிஸம்ஶாநிதா ஸீதா ஸதபூாஶவிதெதக்ஷணா | கூஶாநஶநவவஜாஜ ஶம ஶாநுஹிஜயூஷீ ||திஸம்மாநிதா ஸீதா பர்த்தார மஸிதேக்ஷணா, ஆத்வாரமநு வவ்ராஜ மங்களாந்ய பிதத்புஷீ." என்று திருவாசலளவும் தான் மங்களா சாஸநம் பண்ணிக்கொண்டு பின்சென்று "பூர்வாம் திஶம் வஜ்ரதர:" என்று தொடங்கி யமன் வருணன் முதலிய திக் பாலகர்களையும் இவர்க்கு ரக்ஷகராக வபேக்ஷித்தாள்.

அயோத்யா வாஸிகளான ஸகல ஜனங்களும் காலையும் மாலையும் இராமபிரானுடைய மங்களங்களை ஆசாஸித்து எல்லாத் தெய்வங்களையும் வழிபடும்படியை "ஸ்ரியொ வ்ருஜாஸ்ஸஶணுஸ்ஷு ஸாயம் வஜாதஸ்ஸஶஹிதாঃ || ஸவூாநு தெவாநு நஶஸ்யுஜி ஶாஶஸ்யூ யெஶ யஶஸ்வூிநঃ— ஸ்திரியோ வ்ருத்தாஸ் தருண்யஸ் ச ஸாயம் ப்ராதஸ் ஸமாஹிதா: ஸர்வாந் தேவாந் நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே யசஸ்விந:" என்ற சலோகத்தினால் தெரிவித்தார் வான்மீகிமா முனிவர்.

குஹப்பெருமாள் இராமபிரானுடைய சக்தி விசேஷங்களையும் நன்கறிந்தவர்; பரதாழ்வானுடைய பக்தியின் கனத்தையும் நன்கறிந்தவர்; அப்படியிருந்தும், நல்ல ப்ரதிபத்தியோடே வந்து கொண்டிருந்த அப்பரதாழ்வானை நோக்கி விபரீதமாகச் சங்கித்து,

“அஞ்சன வண்ணனென் னுருபிர்நாயக னுளாமே
வஞ்சனையாலர செய்திய மன்னரும் வந்தாரே
செஞ்சர மென்பன தீயுமிழ்கின்றன செல்லாவோ
உஞ்சிவர் போய்விடின் நாய்க் குகனென்றெனையோசாரோ?
ஆழ நெடுந்திரையாறு கடந்திவர் போவாரோ?
வேழ நெடும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ?
தோழமை யென்றவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றோ
ஏழைமை வேடனிறந்தில னென்றெனை யேசாரோ?” (கம்பர்.)

என்கிறபடியே அதி ப்ரவ்ருத்திகள் செய்யப் பார்த்ததும், இவ் வண்ணமாகவே பரத்வாஜ மாமுனிவரும் “கச்சிந் ந தஸ்ய அபாபஸ்ய பாபம் கர்த்துமிஹேச்சஸி அகண்டகம் போக்துமனா ராஜ்யம் தஸ்யாநுஜஸ்ய ச—கச்சிந் ந துஷ்டோ வ்ரஜஸி ராமஸ்யாக்லிஷ்ட கர்மண:?” [பரதா! உன்னைப் பார்த்தால் எனக்கு மிகவும் அதிசங்கை யுண்டாகிறதே; இராமனுக்கு ஏதோ தீங்கிழைக்கப் போகிறாய் போலே தோன்ற நின்றாயே; அப்படியில்லையா?” என்று கேட்டது மெல்லாம் ப்ரேமத்தின் கனத்தாலே யல்லவோ?

தண்ட காரண்ய வாஸிகளான மஹர்ஷிகளும் தங்களுடைய ஆபத்தைப் போக்கவும் அபிமதங்களைக் கொடுக்கவும் ஸ்ரீராமபிரான் எழுந்தருளி யிருக்கிறாரென்று அறிந்து வைத்தும் அதை மறந்து அவருடைய வடிவழகில் ஈடுபட்டாலே மங்களா சாஸநம் பண்ணினார்களென்பது “தே தம் ஸோமமிவோத்யந்தம் த்ருஷ்ட்வா வை தர்மசாரிண: மங்களாநி ப்ரயுஞ்ஜாநா: ப்ரத்யக்ருஹ்ணந் த்ருடவ்ரதா:” என்கிற ச்லோகத்தினால் ஸ்ரீராமாயண ப்ரஸித்தம்.

ஸ்ரீ ஜடாயு மஹாராஜர் பிராட்டிக்காக இராவணனோடே பொருது குற்றுயிராய்க் கிடக்கிற தம்மைப் பெருமாள் வந்து கண்டளவிலே ஜநஸ்தானத்திலிருந்த பதினாலாயிரம் இராக்கதப் படைகளையும் தனி வீரம் செய்து நின்று கொன்ற தோள்வலியை அறிந்திருக்கச் செய்தேயும், இனிமேல் என்னாய் விளையப் புகுகிறதோ! என்றஞ்சி ஆயுஷ்மந் என்று கூறும் முகத்தாலே மங்களா சாஸநம் பண்ணினார். [யாம் ஓஷதிமிவ ஆயுஷ்மந்! அந்வேஷஸி மஹாவநே. ஸா தேவீ மம ச ப்ராணா: ராவணேந உபயம் ஹ்ருதம்] என்றது காண்க.

ஸுக்ரீவமஹாராஜர் வாலிவதம் முதலியவற்றால் பெருமானு டைய நிகரற்ற சக்தியைக் கண்டிருக்கச் செய்தேயும் ஸௌகுமார் யத்தையே பார்த்துக் கலங்கி, ஸ்ரீ விபீஷணாழ்வான் நாலு பேரும் தானுமாய் வந்தமைகண்டு, நமக்கெல்லாம் ஒருயிரான பெருமானை நலிந்து நம்மை யெல்லாம் முடிப்பதாக வருகிறானிவன் என்று அறு தியிட்டு முதலிகளுக்குக்காட்டி இவனைச் சித்திரவதம் பண்ண வேணுமென்றதும் இவனை யங்கீகரிக்கவே கூடாதென்று பெருமா னைக் கால் கட்டினதும ப்ரேமத்தின் பாரவசயத்தாலேயன்றோ ?

கிருஷ்ணாவதாரத்திலும் விதுரர் கண்ணபிரானுடைய ஸர்வஜ் ஞத்வம் ஸர்வசக்தியுக்தத்வம் முதலியவற்றை அறிந்திருந்தும், துர் யோதந கோஷ்டியில் கண்ணன் எழுந்தருளினபோது பொய்யாஸந மிட்டுச் சிறிது அநர்த்தம் விளைவித்த படியைக் கண்டு அஞ்சி ப்ரே மாந்தராகித் தம்முடைய திருமாளிகையில் தாமிட்ட ஆஸனத்தை யும் அதிசங்கை பண்ணித் தம் கையாலே அமுக்கிப் பார்த்தாரென் பது "ஸம்ஸ்ப்ருச்யாஸநம் ஸௌரே: விதுரஸ் ஸ மஹாமதி:" என்ற ச்லோகத்தினால் சொல்லப்பட்டது.

எம்பெருமானரால் திருத்திப் பணி கொள்ளப் பெற்ற பிள்ளை யுறங்கா வில்லிதாஸர், நம்பெருமாள் புறப்பாட்டில் என்ன அவத்யம் விளைகின்றதோவென்று அதிசங்கைபண்ணி பிச்சுவாய் என்கிற கத்தியை உருவிப் பிடித்துக்கொண்டு கூடவே உலாவுவர் என்பது ப்ரஸித்தம். இங்ஙனே மற்றுமுள்ள இதிஹாஸங்கள் பலபல. இவர்களெல்லாரையும் அதிசயித்த பெருமேன்மை பொருந்தியவர் இப்பெரியாழ்வார். இவருடைய திருவாக்குக்களுள் திருப்பல் லாண்டுக்கு அமைந்த ஒப்புயர்வற்ற சிறப்பை

"கோதிலவாமாழ்வார்கள் கூறுகலைக் கெல்லாம் ஆதி திருப் பல்லாண்டானதுவும்—வேதத்துக்கு ஓ மென்னுமது போல் உள்ள துக்கெல்லாம் சுருக்காய்த்தான் மங்கலமாதலால்."

என்ற உபதேச ரத்தினமாலை கொண்டு அறிக.

மற்றுள்ள ஆழ்வார்களிற் காட்டிலும் இவ்வாழ்வார்க்கு வில க்ஷணமான ஒரு அதிசயமு முண்டு: வியாஸர் வால்மீகி முதலிய முனிவர்களின் அகக்கண்ணுக்கும் புலனாகாத பகவத் சரித்திரங்களும் இவர்க்குப் புலனாயிருக்கின்றன வென்பர். பெரியாழ்வார் திரு

மொழியில் (5-4-6.) "உன்னுடைய விக்கிரமம் ஒன்றொழியாம லெல்லாம், என்னுடைய நெஞ்சகம்பால் சுவர்வழி யெழுதிக்கொண் டேன்" என்ற விடத்து வியாக்கியான மருளாநின்ற பெரிய வாச்சான் பிள்ளை—"எல்லாம் என்னுநிற்க ஒன்றொழியாமல் என்றது வ்யாஸ வால்மீகிகளுக்கு ப்ராகாசியாதவையும் இவர் தமக்கு ப்ரகாசிக்கையாலே. 'மாலிகன்' 'மல்லிகை மாமாலை' இத்யாதி," என்றருளிச் செய்துள்ளார்.

மஹர்ஷிகளும் மற்றுள்ள ஆழ்வார்களும் அநுஸந்திக்கப் பெறாத இரண்டு பகவச் சரித்திரங்கள் இவ்வாழ்வார் தம்மால் அநுஸந்திக்கப்பட்டிருக்கும்படியைச் சிறிது விவரிப்போம். பெரியாழ்வார் திருமொழி (2-7-8.) "மாலிகனவனோடு தோழமைக் கொள்ளவும் வல்லாய், சாமாறவனை நீ யெண்ணிச் சக்கரத்தால் தலை கொண்டாய்," என்பது ஒரு (அபூர்வ) க்ருஷ்ணாவதார சரித்திரம். அதாவது—மாலிகன் என்பானொருவன் கண்ணபிரானுக்கு உயிர்த் தோழனாய் அவனிடத்திற் பலவகை ஆயுதப் பயிற்சிகளையும் பெற்று ஒருவர்க்கும் அஞ்சாமல் அஹங்காரியாய் ஸாது ஜனங்களை ஹிம்ஸித்துக் கொண்டிருக்க, நண்பனாகிய இவனை நாம் கொல்வது தகாதே! என்ன செய்யலாம்' என்று வியாகுலப்பட்டு, ஒரு நாள் அவனை நோக்கி 'நீ இப்படிச் செய்வது தகாது' என்ன, ஆஸுரப்ரக்ருதியான அந்த மாலிகன் தன் வாயில் வந்தபடி பிதற்றி 'நீ எல்லா ஆயுதங்களையும் எனக்குக் கற்பித்தும் சக்ராயுதப் பயிற்சி மாத்திரம் செய்விக்கவில்லையே' என்று குறை கூற, 'இதில் பழகுவது உனக்கு முடியாது; இது எனக்கே அஸாதாரணமானது' என்ன; 'என்னால் முடியாததும் ஒன்றுண்டோ? நீ அவசியம் அதைக் கற்பிக்கவேணும்' என்று அவன் நிர்ப்பந்திக்க, கண்ணன் 'இதுதான் தக்க ஸமயம்' என்று திருவுள்ளத்திற் கொண்டு சக்கராயுதத்தை யெடுத்துத் தன் ஒற்றை விரலால் சுழற்றி மேலெறிந்து கையில் ஏற்க, 'இது எனக்கு அரிதோ?' என்று மாலிகன் சொல்ல, 'இது உனக்கு அரிதே' என்று கண்ணன் சொல்லவும் அதை அவன் கேளாமல் அச் சக்ராயுதத்தை வாங்கிச் சுழற்றி யெறிந்து பிடிப்பதாக நினைத்துத் தன் கை விரலைக் கழுத்துக்கு அடுத்து வைத்து நிற்க, அச் சக்கரம் சுழன்று வருவதற்கு இடம் போதாமையாலே அதன் வீச்சு இவன் கையிற் பிடிபடாமல் இவன் தலையை அரிந்து விட்டது என்பதாம்.

ஸ்ரீ சக்ரவர்த்தித் திருமகனார் அயோத்தியி லிருந்த காலத்தில் பிராட்டியும் தாமுமாக இராக் காலங்களில் ஏகாந்தமான விடத்தில் உல்லாஸமாக இருக்கையில் பிரணய மிகுதியினால் பிராட்டி பெருமாளை மல்லிகை மாலையைக்கொண்டு ஒரு முஹுர்த்த காலம் கட்டிப் போட்டுவைத்திருந்தா ளென்பது (3-10-2.) "எல்லியம் போதினி திருத்த லிருந்ததோரிடவகையில், மல்லிகை மாமாலை கொண்டு அங்கு ஆர்த்ததுமோ ரடையாளம்" என்ற பாசுரத்தினால் வெளியிடப்பட்ட அபூர்வமான வொரு இதிஹாஸம்.

ஆகவிப்படி வ்யாஸ வால்மீகிகளிற் காட்டிலும் மற்றுள்ள ஆழ்வார்களிற் காட்டிலும் சிறப்புற்றோங்கி விளங்கின இவ்வாழ்வார்க்கு நாம் என் செய்ய வல்லோம்? இவர் கற்பித்த மங்களா சாஸனத்தையே இவர் திறத்து நாமும் விநியோகித்து வாழ்வோமாக.

---

## ஸ்ரீ ராமானுஜ ஸித்தாந்தம்.

[பத்ராதிபர்]

[ஏரார் வைகாசி விசாகத்தின் 134-வது பக்கத்தின் தொடர்ச்சி]

பரனாவான். ஈஶ்வரன். அவன் ஜகத்காரண பூதனாய் ஸர்வ ரக்ஷகனாய் ஸ்ரீய: பதியாய் ஸமஸ்தகல்யாண குணாத்மகனா யிருப்பான் என்று சொல்லப்பட்டது.

இப்பேர்ப்பட்ட ஸர்வேஶ்வரன் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களையும் பண்ணக்கடவனா யிருப்பன்.

அதெங்ஙனே யெனில்!, சதுர்முக ப்ரஹ்மாதிகளுக் கந்தர்யாமியாய் நின்று ஸ்ருஷ்டியைப் பண்ணா நிற்பன். அவ்வாறு ஸ்ருஷ்டிக்கப்பட்ட ஆத்மாக்களைத் தானே விஷ்ணு ரூபமாய் நின்று பரிபாலியா நிற்பன். ருத்ராதிகளுக் கந்தர்யாமியாய் நின்று ஸம்ஹாரத்தைப் பண்ணா நிற்பன்.

இவ்வாறு தன்னால் படைத்துப் பரிபாலிக்கப்படா நின்ற சேதனர்களைத் தானே ருத்ராதிகளுக் கந்தர்யாமியாய் நின்று ஸம்ஹாரத்தையும் செய்கிறான் என்பது, ஸர்வ ரக்ஷகனாய் தயா, வாத்ஸல்யாதி கல்யாண குணங்களையுடையவனா யிருக்கும் ஸர்வேஶ்வர

னுடைய ஸ்வபாவத்திற்கு ஸர்வவிதத்தாலும் பொருத்தமுடையதன்று, என்று சங்கிக்கக்கூடும். அது சரியன்று.

ஸம்ஹரித்தலாவது, தேஹவியோகத்தைப் பண்ணுதல். அதாவது தன்னை வணங்கி உஜ்ஜீவிக்கக் கொடுத்த கரசரணாதி (கைகால் முதலான) அவயவங்களைக்கொண்டு அபதே (கெட்ட மார்க்கத்தில்) செல்லா நின்ற சேதனர்களை அவ்வாறு செல்லாமற் செய்வதற்காகவே உலகத்தில் ந்யாயாதிபதிகள் தீமை செய்யுமவர்களை விலங்கிட்டுச் சிறைச்சாலையிற் சில காலம் வைத்து தண்டிக்குமாப்போலே சேதநர்களின் ஹிதத்தையே சிந்தியாநின்ற பரமகாருணிகனான ஸர்வேஶ்வரனும் விபரீத மார்க்கத்திற்செல்ல யோக்யமான சேதனர்களின் கரசரணாதிகளை ஒழித்துச் சிலகாலம் வைத்துப் பின்னையும், நிர்ஹேதுகமான தனது பரம க்ருபையாலே கரசரணாதிகளைக் கொடாநிற்கும் ஆதலின்;ஸம்ஹாரமும் சேதனர்களின் ஹிதத்தைக் கருதியே செய்யா நிற்குமென்றதாயிற்று.

இந்தப்ரகாரம். ஸர்வஜகத்காரண பூதனாய் ஸர்வரக்ஷகனாய் ஸ்ரீய:பதியாய் ஸமஸ்த கல்யாண குணாத்மகனாய் ஸ்ருஷ்டி ஸ்திதஸம்ஹாரங்களையும் பண்ணுமவனாயிருக்கும் ஸர்வேஶ்வரன், பரவ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதார ரூபங்களால் ஐந்து ப்ரகாரமாக எழுந்தருளியிருந்து நித்யமுக்த பக்தர்கள் என்கிற த்ரிவித (மூன்றுவித) மான ஆத்மாக்களையும் ஆனந்திப்பியா நிற்பன்.

இதில் பரனாவான். த்ரிபாத் விபூதியென்கிற ஸ்ரீ வைகுண்டத்தில் அனேகமாயிரம் ரத்நஸ்தம்பங்களா லலங்கரிக்கப்பட்டு உபய விபூதியிலுமுள்ளா ரனைவரும் ஒரு மூலையிலடங்கும்படி அதிவிஶாலமாய் அளவிலா வானந்தத்தை உண்டு பண்ணக் கூடிய திருமாமணி மண்டபத்தில் ஸர்வாஶ்சர்ய மயமான கோப்புடைய சீரிய சிங்காதனத்தில் பன்னிரண்டிதழ்களையுடையதாய் நாநாஶக்தி மயமான திவ்ய கமலத்தின் கர்ணிகையில் புஷ்பங்களால் பரப்பப்பட்ட திவ்யபர்யங்கத்தில் (கட்டிலில்) அனேகமாயிரம் சந்த்ரர்களை உருக்கிவார்த்தாப் போலே குளிர்ந்த புகரையுடையனாய் "சென்றால் குடையாம்" என்கிறபடியே ஸர்வவித கைங்கர்யங்களிலும் அந்வயிக்கு மவனாய் பகவதநுபவத்திற்குப் போக்கு வீடாகப்பல வாய் தலைகளையுடையனாய்,"ஆங்காரவாரமது கேட்டு" என்கிறபடி பகவத்குணாநுபவம் பண்ணாநின்ற நித்யமுக்தர்களின்

